# முகமது அலி யார்?

ஆங்கிலத்தில்: ஜேம்ஸ் பக்லி ஜூனியர்.
படங்கள்: ஸ்டீபன் மார்செசியால்
தமிழில்: குமரேசன் முருகானந்தம்

முகமது அலி
யார்?



# முகமது அலி யார்?

ஆங்கிலத்தில்: ஜேம்ஸ் பக்லி ஜுனியர்.
படங்கள்: ஸ்டீபன் மார்செசியால்
தமிழில்: குமரேசன் முருகானந்தம்

## உள்ளடக்கம்

# முகமது அலி யார்?

**காசியஸ் க்ளே** மக்களை திகைப்படையச் செய்ய விரும்பினார். அவர் ஒரு குத்துச்சண்டை வீரர், தான் எவ்வளவு பெருமை மிக்கவன் என்று தற்புகழ்ச்சி கொள்ள விரும்பினார். அவர் கவனத்தை ஈர்ப்பதற்காக தற்பெருமை காட்டவிரும்பினார் மற்றும் சில நேரங்களில் கவிதை நடைகளில் பேசினார். மேலும் அவர் வெற்றி பெறுவதை விரும்பினார். இருந்தாலும் அவருக்கு வயது இருபத்தி இரண்டுதான் அப்போது. குத்துச்சண்டையில் மிகவும் விரும்பப்படும் பட்டமான உலக **ஹெவிவெயிட் சாம்பியன்ஷிப்**பிற்காக அவர் ஒருபோதும் போட்டிகளில் கலந்துகொள்ளவில்லை. அவர் வேகமானவராகக் கருதப்பட்டார், ஆனால் போதுமான அளவு பலமானவரல்ல.



**சோனி லிஸ்டன்** சாம்பியன் பட்டம் வென்றவர். அவர் தனது சாம்பியன்ஷிப் பட்டத்தை கிட்டத்தட்ட இரண்டு ஆண்டுகளாக தக்கவைத்திருந்தார். அவர் ஆற்றல் மிக்கவராகவும், அனுபவம் வாய்ந்தவராகவும், கடுமையாக-தாக்குபவராகவும், மூர்க்கத்தனமானவராகவும் இருந்தார். பல குத்துச்சண்டை வீரர்கள் அவருடன் களத்தில் இறங்க பயந்தனர்.



பிப்ரவரி 25, 1964 அன்று, புளோரிடாவின் மியாமி கடற்கரையில், "லூயிஸ்வில்லி லிப்" என்று அழைக்கப்பட்ட- **க்ளே**வுக்கும்- சக்திவாய்ந்த சாம்பியனான **லிஸ்டனுக்கும்** இடையே ஒரு குத்துச்சண்டை போட்டி நடந்தது.



போட்டி தொடங்கியவுடன், **லிஸ்டன்**, **க்ளே**வை ஆக்ரமிக்க முயன்றார். ஆனால் **காசியஸ்** வேகமாக நகர்ந்து பாரிய மனிதனின் குத்துக்களை நடனமாடியபடி தவிர்த்தார். சுற்றுகள் செல்ல செல்ல, முப்பத்திரண்டு வயதான **சோனி லிஸ்டன்** சோர்வடைந்தார். அவர் தனது கால்கள் சோர்வடைவதை உணர்ந்தார். இதற்கிடையில், **க்ளே**, நயமாக வேகத்துடன் தொடர்ந்து நகர்ந்து, **லிஸ்டனை** மீண்டும் மீண்டும் தாக்கத் தொடங்கினார்.

ஆறு சுற்றுகளுக்குப் பிறகு, **லிஸ்டன்** சோர்வடைந்தார். ஏழாவது சுற்றுக்கு **கிளே**யை சந்திக்க அவரால் வெளியே வர முடியவில்லை. சண்டை முடிந்தது! **காசியஸ் கிளே** வென்றார்!

**க்ளே** வளையத்தின் தனது மூலையில் இருந்து பொங்கி எழுந்து, வளையத்தைச் சுற்றியுள்ள கயிறுகளின் மீதேறி. "நான் உலகையே அதிர்ச்சியடையச் செய்துவிட்டேன்!" என்று கூவினார். கொண்டாட மக்கள் மேடையை நிரப்பியபோது "நான் உலகையே அதிர்ச்சியடையச் செய்துவிட்டேன்!" என்று கூவினார். **சோனி லிஸ்டனை** தோற்கடித்ததன் மூலம், **கிளே** உலகின் **ஹெவிவெயிட்** குத்துச்சண்டை சாம்பியன் ஆனார்.

விரைவில், **காசியஸ் க்ளே** தனது மதத்தை கிறித்தவத்திலிருந்து இஸ்லாம் என்றும், தனது பெயரை முஹம்மது அலி என்றும் மாற்றியபோது அவரது குடும்பத்தையும் உலகையும் மீண்டும் அதிர்ச்சிக்குள்ளாக்கினார்.



வருடங்கள் செல்ல செல்ல, **அலி** பலமுறை சாம்பியனானார். அவர் குத்துச்சண்டை களத்திற்கு உள்ளேயும் வெளியேயும் மக்களை ஆச்சரியப்படுத்தினார். எல்லாவற்றிலும், 1964 இல் அவர் காட்டிய அதே தனித்துவமான பாணியையும் தைரியத்தையும் கொண்டிருந்தார். **சோனி லிஸ்டனுக்கு** எதிரான அவரது பெரிய வெற்றிக்குப் பிறகு, அவர் கூட்டத்தை நோக்கி, "நான் தான் மிகச் சிறந்த வெற்றியாளன்!" என்று கத்தினார். அடுத்தடுத்த ஆண்டுகளில், அவர் அதை நிரூபித்தார்.

# அத்தியாயம் 1
# லூயிஸ்வில்லில் வாழ்க்கை

*1942* ஆம் ஆண்டு ஜனவரி *17*ஆம் தேதி, கென்டக்கியில் உள்ள லூயிஸ்வில்லில் பிறந்த **காசியஸ் மார்செல்லஸ் கிளே ஜூனியர்** என்று பெயரிடப்பட்ட, அவர் முகமது அலி என்ற பெயருடன் உலகப் புகழ்பெற்றவரானார். "அவன் பிறந்தபோது நாங்கள் அவனை **'ஜிஜி'** என்று அழைத்தோம்," என்று அவரது தாயார் **ஒடெசா கிளே** கூறினார். "அவன் 'ஜீ, ஜீ, ஜீ, ஜீ' என்று சொல்வான்." மற்ற குழந்தைகளுக்கு முன்பாக **காசியஸ்** ஓடியாடியும் பேசியவாறும் இருந்ததாகவும் அவர் சொன்னார். மேலும் அவன்



வலுவாக இருந்தான். ஒருமுறை, தற்செயலாக அம்மாவின் வாயில் இடிக்க, அவர் தனது பற்களில் ஒன்றை இழந்தார்.

*1944* இல், **காசியஸின்** சகோதரன் **ருடால்ஃப்** பிறந்தான். குழந்தையான தனது சகோதரனை **காசியஸ்** நன்றாக கவனித்துக் கொண்டான், மேலும் சில சமயங்களில் **ரூடி** என்று அழைக்கப்பட்ட **ருடால்ஃபை** தனது அம்மா அடிப்பதை அவன் தடுக்கவும் முயன்றான்.



அவர்களின் தாயார் ஒரு **பாப்டிஸ்ட்** தேவாலயத்தில் இணைந்து அவர்களை கிறிஸ்தவர்களாக வளர்த்தார். "ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும், அவர் எனக்கு ஆடை அணிவித்தார், என்னையும் என் சகோதரனையும் தேவாலயத்திற்கு அழைத்துச் சென்றார், அவர் தான் சரியென்று நினைத்த விதத்தில் எங்களுக்குக் கற்றுக் கொடுத்தார்," என்று **காசியஸ்** தனது வாழ்க்கையில் பின்னர் கூறினார்.

சிறுவர்கள் சற்று பெரியவர்களாக வளர்ந்த போது, **காசியஸ்** என்ற பெயருடைய அவர்களின் தந்தை அவர்களை விளம்பரக் ஓவியம் வரைவதற்கான தனது வேலையில் சேர்த்துக் கொள்வார். அப்பாவோடு வேலை செய்யாதபோதோ, பள்ளி செல்லாத போதோ, சிறுவர்கள் ஒன்றாக விளையாடினர். அவர்கள் கோலி மற்றும் தொடு கால்பந்து விளையாடுவதை விரும்பினர். **காசியஸ்** மிக வேகமாக ஓடுபவன். சில சமயங்களில் அவனுடைய நண்பர்கள் அவனை உற்சாகப்படுத்த பள்ளிப் பேருந்துக்கு இணையாக போட்டிப்போட்டுக்கொண்டு ஓடுவான்.





ஒன்று சேர்ந்தால் இரண்டு சிறுவர்களும் ஆற்றல் நிறைந்தவர்களாக இருந்தனர். அவர்கள் சுற்றி இருக்கும்போது ஏதோ ஒன்று எப்போதும் உடைந்து போவதால்,. நண்பர்கள் அவர்களை "***ரெக்கிங் க்ரூ***" என்று அழைத்தனர், **காசியஸ்** மிகவும் சகஜமாகப்பழகும் தன்மை உள்ளவனாக இருந்ததால், யாருடனும் சிரித்து பேசுவதில் மகிழ்ச்சியாக இருந்தான். "அவன் நான்கு வயதிற்குள், அவனுக்கு மிகுந்த தனநம்பிக்கை இருந்தது," என்று அவரது தாயார் நினைவு கூர்ந்தார். சகோதரர்கள் தங்களுடைய அக்கம்பக்கத்து மக்களுக்கு நிறைய செய்ய முடியும், ஆனால் **லூயிஸ்வில்லின்** 1940கள் மற்றும் 1950களில் அமெரிக்காவில், குறிப்பாக தெற்கில் சில பகுதிகளுக்குச் செல்லகூடாது என்று அவர்களுக்குத் தெரியும்.

கறுப்பு மற்றும் வெள்ளை இன மக்கள் பெரும்பாலும் ஒன்றாக இருக்கவில்லை. கறுப்பர்கள் வெள்ளையர்களிடமிருந்து தனித்தனியாக இருக்க வேண்டும் என்று பல வெள்ளையர்கள் கருதினர். **கென்டக்கி** போன்ற தென் மாநிலங்களில் கறுப்பின மக்கள் பொது குளங்களில் நீந்தவோ அல்லது வெள்ளை நிற குழந்தைகளுடன் பள்ளிக்கு செல்லவோ கூடாது என்று சட்டங்கள் இருந்தன. **காசியஸ்** ஒரு பிளவுபட்ட அமெரிக்காவில் வளர்ந்தார், அது அவர் ஒருபோதும் மறக்கவில்லை.

1954 ஆம் ஆண்டில், **காசியஸுக்கு** பன்னிரண்டு வயதாக இருந்தபோது, அவரும் அவரது நண்பர்களும் **லூயிஸ்வில்லியின்** கொலம்பியா ஆடிட்டோரியத்திற்கு **லூயிஸ்வில்லி ஹோம் ஷோவைக்** காண மிதிவண்டியில் சென்றனர்.



# முதலாம் காசியஸ் எம். க்ளே

முதலாம் **காசியஸ் மார்செல்லஸ் க்ளே** 1810இல் கென்டக்கியில் பிறந்த ஒரு வெள்ளையர். அவரது தந்தை அடிமைகளை வைத்திருந்தாலும், இளம் **க்ளே** அடிமைத்தனத்திற்கு எதிரானவர். அவர் வளர்ந்ததும் அதற்கு எதிராகப் பேசினார். அவர் **ட்ரூ அமெரிக்கன்** என்ற அடிமைத்தனத்திற்கு எதிரான செய்தித்தாளை வெளியிட்டார். அவரது கருத்துக்கள் தெற்கில் மிகவும் விரும்பத்தகாதவையாக இருந்தது. அதனால் அவர் கும்பலால் தாக்கப்பட்டார். மேலும் அவரது குடும்பத்தினர் அவதிப்பட்டனர். 1860 ஆம் ஆண்டில் **ஆபிரகாம் லிங்கனை** ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்க **க்ளே** உழைத்தார்,



மேலும் உள்நாட்டுப் போரின் போது, **வாஷிங்டன், டி.சி.**யைக் காக்கப் போராடிய தன்னார்வத் தொண்டர்களின் குழுவை அவர் வழிநடத்தினார். போரின் போதும் அதன் பின்னரும், அவர் **ரஷ்ய** நாட்டிற்கான **அமெரிக்க** அமைச்சராக பணியாற்றினார். அமெரிக்காவிற்குத் திரும்பிய பிறகு, அவர் 1903 இல் இறப்பதற்கு முன்பு குடியரசுக் கட்சியில் பல ஆண்டுகள் பணியாற்றினார். **க்ளேயின்** அடிமைத்தனத்திற்கு எதிரான கருத்துக்கள் ஒரு கறுப்பின குடும்பத்தை 1912இல் தங்கள் மகனுக்கு அவரது பெயரை வைக்கத் தூண்டியது. 1942இல், அந்த மனிதர், **காசியஸ் க்ளே சீனியர்**, தனது மகனுக்கு **காசியஸ் கிளே ஜூனியர்** என்று பெயரிட்டார்.

மேஜை, நாற்காலி மற்றும் வீட்டு பயன்பாட்டுச் சாதனங்கள் போன்ற பொருட்காட்சி பொருட்களுடன் கூடுதலாக, இலவச **பாப்கார்ன்** போன்ற மிகவும் பிடித்த தின்பண்டங்களைக் கண்ட சிறுவர்கள் மகிழ்ச்சியடைந்தனர்.. பொருட்காட்சியில் அவர்கள் பல மணிநேரம் சுற்றித் திரிந்த பிறகு, **காசியஸ்** தனக்கு மிகவும் பிடித்த தனது சிவப்பு மற்றும் வெள்ளை **ஷ்வின்** சைக்கிள் திருடு போய்விட்டதைக் கண்டுபிடித்தான்.

அவன் மிகவும் வருத்தமுற்றான். அந்த கட்டிடத்தில் ஒரு போலீஸ்காரர் இருப்பதாக யாரோ சொன்னார்கள், எனவே **காசியஸ்** திருட்டைப் பற்றி புகாரளிக்கச் சென்றான். **காசியஸ்** அழுது கொண்டிருந்தான். சைக்கிளை திருடியது யாராக இருந்தாலும் அடிக்க விரும்புகிறேன் என்றான்.



**ஜோ மார்ட்டின்** என்ற அந்த போலீஸ்காரர், ஆடிட்டோரியத்தின் அடித்தள ஜிம்மில் குத்துச்சண்டை பயிற்சி கொடுத்துக் கொண்டிருந்தார். தனது கோபத்தை ஓரளவு கட்டுப்பாட்டுடன் செலுத்துவதற்காக குத்துச்சண்டையை முயற்சி செய்ய **காசியஸை** அழைத்தார். அவன் குத்துச்சண்டையை ரசிப்பது மட்டுமல்லாமல், தான் மிகவும் திறமையானவன் என்பதையும் **காசியஸ்** விரைவில் கண்டுபிடித்தான்.

**ஜோ மார்ட்டினிடம்** சேர்ந்து பயிற்சி பெறத் தொடங்கிய சிறிது காலத்திலேயே, காசியஸ் டுமாரோஸ் (வருங்கால) **சாம்பியன்ஸ்** என்ற உள்ளூர் தொலைக்காட்சி நிகழ்ச்சியில் இடம்பெற்றான். பன்னிரெண்டு வயதேயான **காசியஸ்**, ரோனி ஓ'கீஃப் என்ற இளைஞருக்கு எதிராக களம் இறங்கினான். **காசியஸ்** அந்த போட்டியில் வெற்றி பெற்றான், அது அவனது அற்புதமான தொழில்முறை குத்துச்சண்டை வாழ்க்கையின் துவக்கமாக அமைந்தது.



காசியஸ் தனது திருடப்பட்ட சைக்கிளை ஒருபோதும் மீட்கவில்லை. அப்போதிருந்து, அவன் தனது முழு ஆற்றலையும் குத்துச்சண்டையில் செலுத்தினான். மார்ட்டின் சில நாட்களில் காலை 4:00 மணிக்கு உடற்பயிற்சி கூடத்தைத் திறக்க வேண்டியிருந்தது, பள்ளி நேரத்திற்கு முன் காசியஸைப் பயிற்சிக்கு அனுமதித்தார். காசியஸ் ஓடும்போது கால் தசைகளை வளர்க்க கனமான எஃகு-விரல் முனையைக் கொண்ட பூட்களை அணிந்தான். அவன் தனது வலிமையை அதிகரிக்க சத்து பானங்கள் மற்றும் பச்சை முட்டைகளை குடித்தான். அவன் சோடா போண்டவற்றைக் குடிக்கவில்லை, மாறாக பூண்டு கலந்த தண்ணீரை குடித்தான். அது நல்ல வாசனை உடையதில்லை, ஆனால் அது அவனுக்கு பிடித்திருந்தது! களத்தில், அவன் தனது வேகத்தைப் பயன்படுத்த கற்றுக்கொண்டான். விரைவாக பின்புறம் சாய்வதன் மூலம் பல குத்துக்களைத் தவிர்க்க முடியும் என்பதையும், அவனது கைகள் கால்களைப் போலவே வேகமாக நகரும் என்பதையும் அவன் கண்டறிந்தான். அவன் மேலும் மேலும் சண்டைகளை வென்றதால், அவன் தான் எவ்வளவு சிறந்தவன் என்று மக்களிடம் சொல்ல தயங்கவில்லை.

அவன் தனது பள்ளிப் படிப்பை விட குத்துச்சண்டையில் அதிக கவனம் செலுத்தினான். அவனது உயர்நிலைப் பள்ளிப் பருவத்திலேயே தனது வாழ்க்கையானது குத்துச்சண்டை களத்தில் இருப்பதை அவன் உணர்ந்தான்.



அவன் "எபோதுமே தான் தான் சிறந்தவன்" என்று பெருமை பேசிவந்தான். அவனுடைய தலைமையாசிரியர் கூட பள்ளியில் பிரச்சனை செய்பவர்களை சமாளிக்க காசியஸிடம் அனுப்பப் போவதாக கேலி செய்தார்!

இருந்தாலும், அவன் முழுக்க முழுக்க கடுமையானவனல்ல. எப்போதுமே மற்றவர்களின் கவனத்தின் மையமாக இருக்க விரும்பினாலும், **காசியஸ்** பெண்களிடம் மிகவும் வெட்கப்பட்டான். சொல்லப்போனால், டேட்டிங்கின் போது முதல்முறையாக ஒரு பெண்ணை முத்தமிட்டபோது மயங்கி விழுந்தான்!



பதினெட்டு வயதிற்குள், **காசியஸ்** தனது 108 பொழுது போக்கு (அமெச்சூர்) போட்டிகளில் 100 போட்டிகளில் வெற்றி பெற்றான். குத்துச்சண்டைப் போட்டிகளுக்காக அவனும் **மார்ட்டினும்** பல நகரங்களுக்குச் செல்ல வேண்டியிருந்தது. அவர்களில் பெரும்பாலானவர்களில், கறுப்பர்கள் மற்றும் வெள்ளையர்களிடையே பாகுபாடு இருப்பதைக் **காசியஸ்** கண்டார். ஆப்பிரிக்க அமெரிக்க குத்துச்சண்டை வீரர்கள் எந்த உணவகங்களுக்குச் செல்வது என்பதை கவனமாக தேர்வு செய்ய வேண்டியிருந்தது. கறுப்பின மக்களை அனுமதிக்கும் சில விடுதிகளில் மட்டுமே அவர்கள் தங்க முடியும். **காசியஸ்** இதையெல்லாம் உள்வாங்கி நினைவு கூர்ந்தார்.



அந்த இளம் குத்துச்சண்டை வீரன் தான் ஒரு சாம்பியனாவேன் என்று உண்மையிலேயே நம்பினான். 1957ல், அவன் பிரபலமான குத்துச்சண்டை பயிற்சியாளர் **ஏஞ்சலோ டண்டீ** என்பவரைப் பார்த்தான். **டண்டீ** அந்த நேரத்தில் **லூயிஸ்வில்லி**ல் இருந்தார், மற்றொரு வீரரை பயிற்றுவித்துக் கொண்டிருந்தார்.



ஏஞ்சலோ டண்டீ

காசியஸ் ஏஞ்சலோ டன்டீயை, டன்டீ தங்கியிருந்த ஹோட்டலுக்கு அழைத்து அவரை சந்திக்க அனுமதி கேட்டான்.

துணிச்சலான அந்த இளைஞன், "நான் கோல்டன் க்ளோவ்ஸ்களை வெல்வேன், 1960இல் ஒலிம்பிக்கில் வெற்றி பெறுவேன், நான் உங்களுடன் பேச விரும்புகிறேன்." என்றான். கோல்டன் க்ளோவ்ஸ் போன்ற ஒரு தேசிய அமெச்சூர் போட்டியில் அந்த இளைஞன் வெற்றி பெற முடியும் என்று டண்டீ நம்பவில்லை, அதனால் அவனுக்கு பயிற்சி அளிக்க அவர் ஒப்புக்கொள்ளவில்லை. ஒரு நாள் க்ளேவின் கணிப்பு உண்மையாகிவிடும் என்பதை அவர் உணரவில்லை.

# குத்துச்சண்டை விளையாட்டு

குத்துச்சண்டை ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக ஒரு விளையாட்டாக இருந்து வருகிறது. **பண்டைய கிரேக்கர்கள்** தங்கள் **ஒலிம்பிக்** விளையாட்டுகளில் குத்துச்சண்டையை சேர்த்தனர். 1800கள் வரை ஆண் குத்துச்சண்டை வீரர்கள் கையுறைகள் இல்லாமல், தங்கள் வெற்று முஷ்டிகளைப் பயன்படுத்தினர்.



ஆனால் 1867 ஆம் ஆண்டில் குத்துச்சண்டையை பாதுகாப்பானதாக மாற்றுவதற்கு தொடர்ந்து விதிகள் உருவாக்கப்பட்டன. இன்றைய குத்துச்சண்டை அந்த விதிகளை அடிப்படையாகக் கொண்டது. ஒரு குத்துச்சண்டை போட்டியானது குத்துச்சண்டை களத்தில் ஏறக்குறைய சம எடை கொண்ட இருவரை ஒருக்கொருவரை எதிராக நிறுத்துகிறது. எடை பிரிவுகள் ஸ்ட்ராவெயிட் (105 பவுண்டுகள்), வெல்டர்வெயிட் (147 பவுண்டுகள்) மற்றும் ஹெவி வெயிட் (200 பவுண்டுகள் மற்றும் அதற்கு மேல்) வரை இருக்கும்.

ஒவ்வொரு போட்டியும் மூன்று நிமிடங்கள் கொண்ட குறிப்பிட்ட எண்ணிக்கையிலான சுற்றுகளின் தொகுப்பாக அமைக்கப்பட்டன. ஒலிம்பிக் போட்டிகள் மூன்று சுற்றுகள் நீடிபாவை, அதே சமயம் ஹெவி-வெயிட் தொழில்முறை சண்டைகள் பதினைந்து சுற்றுகள் வரை இருக்கலாம். ஒவ்வொரு சுற்றுக்கும் இடையே போட்டியாளர்களுக்கு ஒரு நிமிட இடைவெளி கிடைக்கும். குத்துச்சண்டை வீரர்களுடன் ஒரு நடுவர் வளையத்தில் இருக்கிறார். ஒரு வீரர் வீழ்த்தப்பட்டு, நடுவர் பத்து என எண்ணி முடித்தால், சண்டை நாக் அவுட் மூலம் முடிந்துவிடும். ஒரு போராளி மிகவும் காயப்பட்டால், அவரால் தொடர முடியாது, வெற்றியாளர் ஒரு **டேக்கினிகல் நாக் அவுட்டை** (tko) பெறுவார். போட்டி "தூரத்திற்குச் சென்றால்" (எல்லாச் சுற்றுகளையும் முடித்தால்), போட்டியின் போது பெற்ற மதிப்பெண்களின் அடிப்படையில் மூன்று நீதிபதிகள் வெற்றி பெற்றது யார் என்று முடிவு செய்கிறார்கள்.



1959 மற்றும் 1960 இல், **காசியஸ்** தனது முதல் பெரிய பட்டங்களை வென்றான். அந்த இரண்டு வருடங்களிலும் **கோல்டன் க்ளோவ்ஸ்** மற்றும் **அமெச்சூர் அத்லெடிக் யூனியன் சாம்பியன்ஷிப்** இரண்டிலும் வெற்றி பெற்றவனாவான். குத்துச்சண்டை ஏணியின் அடுத்த பெரிய படியானது: **கோடைகால ஒலிம்பிக்ஸ் போட்டியாகும்.**



1960 ஒலிம்பிக் போட்டியில், அமெரிக்காவை பிரதிநிதித்துவப்படுத்தும் குழுவில் எந்த குத்துச்சண்டை வீரர்கள் இடம்பெறுவார்கள் என்பதை ஒத்திகையாட்டங்கள் தீர்மானித்தன. **காசியஸ்** பல கடுமையான சண்டைகளை எதிர்கொண்டார். . . அவர் அனைவரையும் வென்றார்! இத்தாலியின் ரோம் நகருக்குச் செல்லும் அமெரிக்க அணியில் அவர் சேர்க்கப்பட்டார்.

## அத்தியாயம் 2
## ஒலிம்பிக் சாம்பியன்

**ரோம்** நகருக்கு பயணமாவது என்பது **காசியஸ்** விமானத்தில் பயணிக்க வேண்டிடும் என்பதே. அதில் ஒரு சிக்கல் இருந்தது: ஆற்றல்மிக்க குத்துச்சண்டை வீரரான அவன் விமானத்தில் பறப்பதற்கு அஞ்சினான்! **ஜோ மார்ட்டின்** தனது இளம் மாணவனை **ரோம்** நகருக்கு விமானத்தில் தான் பயணிக்க வேண்டும் என்று நம்பவைக்க கடுமையாக பாடுபட்டார்.



இருந்தாலும் **காசியஸ்** முழுமையாக நம்பவில்லை. விமானத்தில் அணிய **பாராசூட்** வாங்கினான்!

OLYMPIC VILLAGE-ROME-1960



பாதுகாப்பாக வந்த பிறகு, விரைவிலேயே உலக விளையாட்டு வீரர்கள் மத்தியில் அவன் நன்கு அறியப்பட்ட ஒருவரானான். சுறுசுறுப்பான அந்த இளைஞன் அனைவரையும் பார்த்து பரவசமடைந்தான். **ரோமில்** உள்ள ஒலிம்பிக் கிராமத்தில் தங்கியிருந்த அவன், பல நாடுகளைச் சேர்ந்த விளையாட்டு வீரர்களுடன் பயணம் மேற்கொண்டான். பெரும்பாலும் தன்னைப் பற்றி பேசுவதற்காகவே தன்னால் முடிந்த அனைவரையும் சந்திக்க விரும்பினான் அவன்.

காசியஸ் தற்பெருமை காட்டவும் குத்துச்சண்டையிடவும் விரும்பினான். அவன் பெல்ஜியம், ரஷ்யா மற்றும் ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த ஆண்களுடன் போட்டியிட்டான். ஒவ்வொன்றும் கடினமான போட்டியாக இருந்தது, ஆனால் காசியஸ் அனைத்தையும் வென்றான். அவன் தன்னை வெளிப்படுத்தும் ஒரு தனித்துவமான வழியைக் கொண்டிருந்தான் மற்றும் வளையத்தில் அவனுக்கு ஒரு தனித்துவமான பாணி இருந்தது. பல வீரர்களைப் போலல்லாமல், அவன் நடனமாடினான், சறுக்கினான், சுற்றி நகர்ந்தபடி இருந்தான். பெரும்பாலான வீரர்கள் ஓரிடத்தில் நின்றவாறு தங்கள் எதிரிகளை வெல்ல முயன்றனர். காசியஸால் குத்தவும் முடியும், ஆனால் அவன் குத்துக்களைத் தவிர்ப்பதில் மிகவும் திறமையானவன். அவனது சக்திவாய்ந்த கைமுட்டிகள் பலமான குத்துக்களுடன் இறங்கும் வரை அவன் ஒரு பாத்திரத்தில் நடிப்பது போலவோ அல்லது ஒரு குறிப்பிட்ட பாகத்தை ஏற்று நடிப்பது போலவோ தோன்றியது.





**லைட்-ஹெவிவெயிட்** தங்கப் பதக்கத்திற்கான அவரது இறுதி ஒலிம்பிக் போட்டி (178 பவுண்டுகள் வரையிலான வீரர்களுக்கு) மேலும் கடினமானது. ஐரோப்பாவில் மூன்று முறை சாம்பியனும் 1956ஆம் ஆண்டு ஒலிம்பிக்கில் போட்டியிட்ட போலந்தின் **சிபிக்னு பியேத்ரொவெஸ்கிஐ காசியஸ்** எதிர்கொண்டார். போலந்து வீரர் வயதில் பெரியவர், பெரிய உருவத்தை உடையவர் மேலும் வலிமை மிக்கவர்.

முதல் இரண்டு சுற்றுகள் சமமாக இருந்தன. மூன்றாவது சுற்றில், **காசியஸ் போலந்து** குத்துச்சண்டை வீரருக்கு மூக்கில் பல குத்துக்களை குத்தி இரத்தம் வரவைத்துவிட்டார். நடுவர்கள் போட்டியின் மதிப்பெண்களை கணக்கிட்டு, **காசியஸ்** வெற்றியாளராக அறிவிக்கப்பட்டார். லூயிஸ்வில்லேவைச் சேர்ந்த பிள்ளை ஒலிம்பிக்கில் தங்கப் பதக்கம் வென்றது!

**க்ளே** அமெரிக்காவுக்குத் திரும்பினான், இன்னும் பேசிக்கொண்டும் தங்கப் பதக்கத்தை அணிந்தபடியும் இருந்தான். அவன் **நியூயார்க்** நகரத்தில் சுற்றுப்பயணம் செய்தான், அவன் சந்தித்த அனைவருடனும் கைகுலுக்கினான். பின்னர் அவன் லூயிஸ்வில்லில் நடந்த "வெல்கம் ஹோம்" நிகழ்ச்சிக்கு திரும்பினான்.

லூயிஸ்வில்லில் நடந்த விழாவில், தான் எழுதிய கவிதையை வாசித்தான். அத்தகைய கவிதைகள் அவனது தனிப்பட்ட பாணியின் நன்கு அறியப்பட்ட பகுதியாக மாறியது.

*எனது குறிக்கோள்அமெரிக்காவை சிறந்த நாடாக மாற்றுவதே. அதற்காக நான் ரஷ்ய வீரரையும் வென்றேன், நான் போலந்து வீரரையும் வென்றேன்.*



அவனுடைய வெற்றிக்கு ஊரிலுள்ள அனைத்து தரப்பு மக்களும் அவ்வளவு உற்சாகம் காட்டவில்லை. 1960இல் கூட, கறுப்பினத்தவர் ஒருவர் இவ்வளவு கவனத்தைப் பெறுவதைக் கண்டு சிலர் மகிழ்ச்சியடையவில்லை. **காசியஸ்**, ரோமில் நடந்த போட்டியில் அமெரிக்காவைப் பிரதிநிதித்துவப்படுத்தினான், ஆனால், அவன் தங்கப் பதக்கம் பெற்றிருந்தாலும், சிலர் அவனை இன்னமும் “பாய்” என்று அழைக்கிறார்கள் என்று கூறினான். அந்த வார்த்தை ஒரு கறுப்பின மனிதனுக்கு பெரும் அவமானமாகும்.

**காசியஸ்** அத்தகைய முன்வெறுப்பு தன்னை பாதிக்க விடவில்லை. ஒரு தொழில்முறை குத்துச்சண்டை வீரனாவதே தனது அடுத்தகட்ட பெரிய நடவடிக்கை என்பதை அவன் அறிந்திருந்தான். இந்த கட்டத்தில், ஒரு அமெச்சூர் வீரனாக, அவன் எந்த போட்டிக்கும் ஊதியம் பெறவில்லை. அவன் ஒலிம்பிக்கில் போட்டியிட ஒரு அமெச்சூர் வீரனாக இருக்க வேண்டும். ஆனால், அவனுக்கும் மற்ற வீரர்களுக்குமான இடைவெளி அதிகம் இருப்பதால், அது முன்னேற வேண்டிய நேரம். அவன் தனது பெற்றோருக்கு ஒரு கார் வாங்கவும், குத்துச்சண்டை வீரனாக பயிற்சி பெறும் **ரூடி**க்கு உதவவும் விரும்பினான். குத்துச்சண்டை அதிக செலவு வைக்கும் ஒரு விளையாட்டு. ஒரு வீரர் பயிற்சியாளர்களையும் உதவியாளர்களையும் அமர்த்திக்கோள்ள வேண்டும், உடற்பயிற்சி கூடங்களை வாடகைக்கு எடுக்க வேண்டும் மேலும் போட்டிகளில் கலந்துகொள்ள பயணிக்க வேண்டும். போட்டியில் சண்டையிடும்போது மட்டுமே சன்மானம் கிடைக்கும். தனக்குத் தேவையான பணத்தைப் பெற, **காசியஸ்** வணிகர்கள் குழுவுடன் ஒப்பந்தம் செய்தான்.

அவன் வெல்லும் மொத்த பரிசுத்தொகையின் ஒரு குறிப்பிட்ட சதவீதத்திற்கு ஈடாக அவனின் ஐந்து வருட பயிற்சிக்கு பணம் செலுத்த ஒப்புக்கொண்டனர். அவர்களுடன் ஒப்பந்தம் கையெழுத்திட்டதற்காக அவனுக்கு போனஸும் கொடுத்தனர்.



அந்தப் பணத்தைக் கொண்டு காசியஸ் செய்த முதல் காரியங்களில் ஒன்று, ஏஞ்சலோ டண்டீயை தனது பயிற்சியாளராக அமர்த்தியது. லூயிஸ்வில்லில் மீண்டும் காசியஸை சந்தித்ததை டண்டீ நினைவு கூர்ந்தார்.

அவர் இளம் வீரனின் முன்னேற்றத்தைப் பார்த்து, அவனை ஒரு சிறந்த குத்துச்சண்டை வீரனாக ஆக்க உதவ முடியும் என்று நினைத்தார். அவனது ஒலிம்பிக் வெற்றிக்குப் பிறகு, **காசியஸ்** ஒரு புதிய இலக்கைக் கொண்டிருந்தான்: அது உலகின் **ஹெவிவெயிட் சாம்பியனாக** வேண்டும் என்பதாகும். தனக்கு **டன்டீ**யின் உதவி தேவை என்பதை அவன் அறிந்திருந்தான்.
போனஸ் பணத்தைக் கொண்டு **காசியஸ்** செய்த மற்றொரு விடயம், தனது பெற்றோருக்கு ஒரு புதிய இளஞ்சிவப்பு காடிலாக் காரை வாங்கியது.





**1960**இல், அவருக்கு பதினெட்டு வயதாக இருந்தபோது, **காசியஸ் மயாமி** நகருக்கு குடிபெயர்ந்தான், அங்கு **டண்டீ** ஒரு உடற்பயிற்சி கூடத்தை நடத்தி வந்தார். இந்த ஆதரவுடன், **காசியஸ்** குத்துச்சண்டையில் அமெச்சூர் முதல் தொழில்முறை வரை சென்றான். அவன் எப்போதும் போலவே வெற்றிகளைப் பெற்றான்.
அவன் பேசிக்கொண்டே இருந்தான். அவன் தொழில்முறை குத்துச்சண்டைக்கு புதியவன் என்றாலும், ஒவ்வொரு போட்டியிலும் வெற்றி பெறுவேன் என்று பெருமையாக கூறினான். போட்டி எத்தனை சுற்றுகள் செல்லும் என்று கணிக்க ஆரம்பித்தான். . .

அவன் சொன்னது பெரும்பாலும் சரியாகவே இருந்து. **டக் ஜோன்ஸ்** உடனான 1963 போட்டிக்கு முன் அவன் இவ்வாறு கூறினான்:

*ஜோன்ஸ் மிக்ஸ் செய்ய விரும்பினால்,*
*நான் அவரை சிக்ஸில் (ஆறாவது சுற்றில்) வெல்வேன்.*
*அவர் ஜைவ்  (நடனம்) ஆடினால்,*
*நான் அதை ஃபைவாகக் (ஐந்து சுற்றாக) குறைப்பேன்.*
*அவர் மேலும் பேசினால்,*
*நான்காக வெட்டுவேன்!*

**க்ளே**யின் உரத்த, வேகமான பேச்சும் தற்பெருமையும் அவனுக்கு "**லூயிஸ்வில்லி லிப்**" எனும் புதிய புனைப்பெயரைப் பெற்றுத் தந்தது:. ஆனால் விளையாட்டில் ஒரு பழமொழி பற்றி அவன் அறிந்திருந்தான்: அது, "***நீங்கள் சொல்லியதை செய்து முடிக்கும் பட்சத்தில் அது தற்பெருமையாகாது.***" என்பதாகும்.

## அத்தியாயம் 3
## உலகத்தின் அரசன்!

அடுத்த பல ஆண்டுகளாக, **காசியஸ்** மயாமியில் **டண்டீ**யிடம் முழுநேரப் பயிற்சி பெற்றான். அவன் தொடர்ந்து வெற்றியும் பெற்றான். **காசியஸ்** 1961இல் எட்டு போட்டிகளையும் 1962 இல் ஆறு போட்டிகளையும் வென்றான். அவன் ஒரு போட்டியில் கூட தோற்கவில்லை. எல்லா நேரங்களிலும், ஜோ மார்ட்டினைப் போலவே காசியஸ் எவ்வளவு கடினமாக உழைத்தான் என்பதைக் கண்டு அவனது பயிற்சியாளர் பிரமிப்படைந்தார். உடற்பயிற்சிக்கூடத்தில் பயிற்சி இல்லாதிருந்த சில அரிய நேரங்களில், **நேஷன் ஆஃப் இஸ்லாமின்** ஒரு அங்கத்தினராக இருந்த **சாம் சாக்சனுடன் காசியஸ்** நட்பு கொண்டார் "நான் ஒரு போட்டிக்காக பயிற்சி மேற்கொண்டிருந்தேன். மேலும் எலியா முகமதுவின் சீடரான கேப்டன் **சாம்** என்பவரை சந்தித்தேன். அவர் என்னை ஒரு கூட்டத்திற்கு அழைத்தார், அதன் பிறகு, என் வாழ்க்கை மாறியது." என்றார் **அலி**.





***எலியா முஹம்மது, நேஷன் ஆஃப் இஸ்லாமின்*** தலைவராவார். இந்த மத இயக்கம் கறுப்பின அமெரிக்கர்களுக்கு மட்டுமேயானது. கறுப்பினத்தவர்களும் வெள்ளையினத்தவர்களும் தனித்தனியாக இருக்க வேண்டும் என்று நம்பப்பட்டது. அதன் உறுப்பினர்கள் மத்திய கிழக்கில் தொடங்கிய பண்டைய மதமான இஸ்லாத்தின் சில நம்பிக்கைகளைப் பின்பற்றினர். இஸ்லாத்தை பின்பற்றுபவர்கள் ***முஸ்லிம்கள்*** என்று அழைக்கப்படுகிறார்கள்.

# நேஷன் ஆஃப் இஸ்லாம் (NoI)

## இஸ்லாமிய தேசம்

இஸ்லாம் என்பது இன்றைய சவூதி அரேபியாவில் ஏழாம் நூற்றாண்டில் முஹம்மது நபிக்கு வெளிப்படுத்தப்பட்ட மதம். இஸ்லாத்தில் நம்பிக்கை கொண்டவர்கள் முஸ்லிம்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். மத்திய கிழக்கு, ஆப்பிரிக்கா, ஆசியா ஆகிய நாடுகளில் நம்பிக்கை வேகமாக பரவியது. இன்று உலகம் முழுவதும் 1.5 பில்லியனுக்கும் அதிகமான மக்கள் இஸ்லாத்தை பின்பற்றுகின்றனர். இஸ்லாமிய தேசம் (NoI) வேறுபட்டது. இது 1930 இல் டெட்ராய்டில் வாலஸ் டி. ஃபார்டால் நிறுவப்பட்டது. 1934 இல் ஃபார்ட் காணாமல் போனார், மேலும் தன்னை எலியா முஹம்மது என்று அழைத்துக் கொண்ட ஒருவர் குழுவின் தலைமைப் பொறுப்பை ஏற்றார்.



**நேஷன் ஆஃப் இஸ்லாமின்** நம்பிக்கைகள், "அல்லா" என்றழைக்கப்படும் கடவுளை ஒரு நாளைக்கு ஐந்து வேளை தொழுவது, பன்றி இறைச்சி உண்ணாமலிருப்பது அல்லது மது அருந்தாமலிருப்பது போன்ற மற்ற முஸ்லீம்களின் நம்பிக்கைகளை பிரதிபலிக்கின்றன. **ஃபார்டும் இலியா முஹம்மதுவும்** மற்ற கருத்துகளையும் சேர்த்தனர்.



அது கறுப்பின மக்கள் அனைவரும் வெள்ளையர்களால் பிரிவினைக்கு உள்ளான பண்டைய இனத்தில் இருந்து வந்தவர்கள் என்று கற்பித்த இலியா முகம்மது வெள்ளையர்களை எதிரி என்று தம் சீடர்களிடம் கூறினார். இது அவரை வெள்ளையர்களுக்கு மட்டுமல்லாமல், சமத்துவத்திற்காக உழைக்கும் கறுப்பினத்தவர்களுக்கும் பிடிக்காமல் போனது. **இலியா முஹம்மது** 1975இல் மறைந்தார். **நேஷன் ஆஃப் இஸ்லாமின்** தலைவராக அவரது இடத்தை பிடித்த அவருடைய மகன் **வாரித் தீன்** அதன் பல கருத்துக்களை மென்மைப் படுத்தினார். மேற்கு நாடுகளில், குழுவின் பெயரை அவர் ***அல்-இஸ்லாம்*** என்று மாற்றினார். இன்று **நேஷன் ஆஃப் இஸ்லாம்** என்ற பெயரை **வாரித் தீன் முகமதுவுடன்** தொடர்பில்லாத வேறு ஒரு குழு பயன்படுத்துகிறது.

காசியஸ், சாம் சாக்சனுடன் பேசி, ஒரு இஸ்லாமிய வழிபாட்டுத் தலமான மசூதிக்குச் சென்றான். காசியஸ் அந்த இயக்கத்தைப் பற்றி ஏற்கனவே கேள்விப்பட்டிருந்தான். உயர்நிலைப் பள்ளியில் படிக்கும்போது, ஆங்கில வகுப்பில் அவன் உண்மையில் கறுப்பின முஸ்லிம்களைப் பற்றி ஒரு கட்டுரை எழுத விரும்பினான், ஆனால் ஆசிரியர் அவனை அனுமதிக்கவில்லை. காசியஸ் மசூதியில் தொழுகையைக் கவனித்தபோது, அவன் கேட்டதைப் பற்றி சிந்தித்தான், அதில் அவனுக்கு ஆர்வம் ஏற்பட்டது.

இதற்கிடையில், காசியஸ் ஹெவிவெயிட் தரவரிசையில் முன்னேறினான். I960 முதல் 1963 வரை, அவன் பத்தொன்பது முறை போட்டியிட்டு அனைத்து போட்டிகளிலும், பெரும்பாலும் நாக் அவுட் மூலம் வெற்றி பெற்றான்,. அவனது சிறந்த சண்டைத் திறமையைப் போலவே அவனது தற்பெருமை மிக்க வசீகரம் கவனத்தை ஈர்க்கவும் செய்தது. பத்திரிகைகளில் கவனத்தை பெறுவது அதிக மக்களை போட்டிகளுக்கு ஈர்க்கும் என்பதை அவன் அறிந்திருந்தான். மேலும் அதிகமான பார்வையாளர்கள் என்றால் அவன் அதிக பணம் சம்பாதிப்பான் என்பதாகும்.

ஒவ்வொரு போட்டிக்கு முன்பும், கோமாளித்தனமாகவும், நகைச்சுவையாகவும், பெருமையைக் காட்டிக்கொள்ளவும் அவன் நிருபர்களையும் புகைப்படக்காரர்களையும் சாந்தித்தான்.

சில பத்திரிக்கையாளர்களுக்கும் குத்துச்சண்டை ரசிகர்களுக்கும் அவர் அப்படி நடந்துகொள்வது பிடிக்கவில்லை.

மற்றவர்கள் அவனைப் பார்ப்பது வேடிக்கையானதாக நினைத்தார்கள்.



அவர்கள் அவன் மீது கவனம் செலுத்தும் வரை அவன் அதற்காக கவலைப்படவில்லை.

அவருக்கு உத்வேகமாக இருந்தவர்களில் ஒருவர் கார்ஜியஸ் ஜார்ஜ் என்ற தொழில்முறை மல்யுத்த வீரர். காசியஸைப் போலவே, ஜார்ஜ் அடிக்கடி தற்பெருமையுடன் கொக்கரித்து வந்தார். அவர் விகாரமான ஆடைகளை அணிந்தும், நீண்ட, சுருள் சுருளான பொன்னிற தலை முடியுடனும் இருந்தார், மேலும் மூர்க்கத்தனமாக பெருமை பீற்றிக் கொண்டிருந்தார். லாஸ் வேகாஸில் ஒரு சண்டைக்கு முன் காசியஸ் ஜார்ஜை ஒருமுறை சந்தித்தார். அந்த மல்யுத்த வீரர் தொடர்ந்து பேசுமாறு அறிவுறுத்தினார்: அதை செயலாக்கு, மக்கள் வருவார்கள் என்று கூறினார்.





சிறந்த பிரிட்டிஷ் சாம்பியனான ஹென்றி கூப்பருடன் சண்டையிட காசியஸ் லண்டனுக்குச் சென்றார். அவர் தனது முரட்டுத்தனத்தாலும் கிண்டல்களாலும் ஆங்கில பத்திரிகையாளர்களை மகிழ்வித்தார். அவர் கூப்பரை ஐந்து சுற்றுகளில் தோற்கடிப்பேன் என்று கணித்தார். . . அவ்வாறே அவர் செய்தார்.

# வசிகரமான ஜார்ஜ்



பிற விளையாட்டு வீரர்கள் விளையாட்டு உலகத்தை மாற்றிடவில்லை, ஆனால் நிச்சயமாக **ஜார்ஜ் வாக்னர்** மாற்றினார். **ஜார்ஜுக்கு** முன், விளையாட்டு வீரர்கள் கூச்சலிடுபவர்களாகவோ, வண்ணமயமானவர்களாகவோ, சர்ச்சைக்குரியவர்களாகவோ அல்லது தற்பெருமையாளர்களாகவோ இருக்கவில்லை. **ஜார்ஜுக்குப்** பிறகு, **முஹம்மது அலி** தொடங்கி விளையாட்டு வீரர்கள், தலைப்புச் செய்திகலில் இடம்பெறுவதும் கவனத்தை ஈர்ப்பதும் அவர்களைப் பிரபலப்படுத்த மற்றும், பணக்காரர்களாகக் கூட உதவக்கூடும் என்பதை அறிந்திருந்தனர்.

வாக்னர் 1940கள் மற்றும் 1950களில் மல்யுத்த வீரராக திகழ்ந்தார். அவர் தனக்கு "சென்சேஷன் ஆஃப் நேஷன்" மற்றும் - மிகவும் பிரபலமான - "கார்ஜியஸ் ஜார்ஜ்" போன்ற புனைப்பெயர்களை வைத்துக் கொண்டார். அவர் தனது தலைமுடியை பொன்னிறமாக சாயமிட்டு நீண்ட சுருள்களாகக் கொண்டிருந்திருந்தார். அவர் வண்ணமயமான தொப்பிகள் மற்றும் காலணிகளை அணிந்திருந்தார். அவர் வரும்போது அழகிய இசை அரங்கை நிறைத்தது. வாக்னர் உள்ளே நுழையும் போது ஒரு உதவியாளர் வளையத்தில் வாசனை திரவியத்தை தெளித்தார், மேலும் ஒரு வெள்ளி கண்ணாடியை எடுத்துச் சென்றார்.



மல்யுத்தம் தொலைக்காட்சியில் பிரபலமான முதல் விளையாட்டுகளில் ஒன்றாகும், மேலும் கார்ஜியஸ் ஜார்ஜ் தனது காலத்தின் மிகவும் பிரபலமான தொழில்முறை மல்யுத்த வீரராக ஆனார், ஏனெனில் அவர் குத்துச்சண்டை காலத்திற்கு வெளியேயும் உள்ளேயும் மகிழ்வித்தார்.

விளையாட்டு மற்றும் பிரபலமான கலாச்சாரத்தில் அவரது செல்வாக்கு இன்றுவரை தொடர்கிறது.

ஆனால் எல்லா வேடிக்கைகளுக்கும் அடியே, சாம்பியனாக வேண்டும் என்ற ஆசை**காசியஸுக்கு** இன்னமும் இருந்தது. இறுதியாக, ஒரு நபர் மட்டுமே அவரது ஆசைக்கு குறுக்கே இருந்தார். அவர் அப்போது உலக ஹெவிவெயிட் சாம்பியனான **சோனி லிஸ்டன்.**

**காசியஸைப்** போலவே, பெரும்பாலான குத்துச்சண்டை நிபுணர்கள் **லிஸ்டன்** மிகவும் சிறந்த வீரர் என்று நினைத்தனர். **லிஸ்டன்** ஏற்கனவே மற்ற அனைத்து சிறந்த வீரர்களையும் தோற்கடித்திருந்தார்.

அவன் இதுவரையில் வாங்கயிறாத மிகவும் பலமான குத்து ஒன்றை வாங்கினான். அவன் குத்துச்சண்டைக் களத்தில் அச்சமற்றவனாக இருந்தான். **காசியஸ்** தனது திறமையான கவனத்தை ஈர்ப்பதைப் பயன்படுத்தினான். அவன் சேம்பியனான **லிஸ்டனை** "***ஒரு பெரிய, அசிங்கமான கரடி***" என்று அழைத்தான்.

**டென்வரில்** உள்ள **லிஸ்டனின்** வீட்டின் முன் **காசியஸின்** தந்தை வரைந்த வாசகம் இருந்த ஒரு பேருந்தை நிறுத்தினான். அதில், லிஸ்டன் எட்டில் தோற்பார், அதாவது எட்டாவது சுற்றில், தோற்கடிக்கபடுவார். போட்டிக்கு முன் எடைபோடும் சமயத்தில், **காசியஸ் லிஸ்டனைக்** கண்டு பயப்படுவது போல் நடித்தான்.



"அவன் நின்று சண்டையிட்டால், நான் அவனைக் கொன்றுவிடுவேன்" என்று **லிஸ்டன்** கூறினார்.

ஒரு வழியாக, **காசியஸுக்கும் சோனி லிஸ்டனுக்கும்** இடையேயான குத்துச்சண்டை போட்டி **மியாமி**யில் 1964ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 25ஆம் தேதி நடைபெற்றது. **க்ளே** வெற்றிபெற முடியும் என்று யாரும் நினைக்கவில்லை என்றாலும், அவன் நடனமாடியபடி நகர்ந்து அந்த பாரிய வீரரின் குத்துக்களைத் தவிர்த்தான். ஆறாவது சுற்று முடிந்தது, **காசியஸ்** நடனமாடியபடி மீண்டும் தனது முனைக்கு திரும்பினான். அப்போது அவன் பெருமையாக உணர்ந்தான் மேலும் **லிஸ்டன்** கடினமாக மூச்சு வாங்கியபடி இருந்தார்.

**லிஸ்டன்** வலியுடன் இருந்தார், மேலும் அவர் ஏழாவது சுற்றுக்கு வரவில்லை. சண்டை முடிந்தது! காசியஸ் **க்ளே** எப்பொழுதும் போல் சொல்வதைச் செய்திருந்தான். அவன் இப்போது உலக **ஹெவிவெயிட் சாம்பியன்**! அவன் தனது **சாம்பியன்ஷிப் பெல்ட்**டைப் பெற்றபோது, ரசிகர்கள் குத்துச்சண்டை வரலாற்றில் மிகப்பெரியதொரு தோல்வியைக் கண்டதை அவர்கள் அறிந்தனர். இருந்தாலும், புதிய சாம்பியனுக்கு, அவரது வெற்றி ஆச்சரியமானதாக இல்லை.



**காசியஸ்** குத்துச்சண்டை மேடையைச் சுற்றி குதித்தான். கயிற்றில் ஏறி "எக்காலத்திலும் நானே மிகச் சிறந்த வெற்றியாளன்! நான் உலகின் ராஜா!" என்று கூவியபடி, கைமுட்டிகளை காற்றில் உயர்த்தி ஆட்டினான்.

## அத்தியாயம் 4
## காசியஸ் முஹம்மது ஆகிறார்

சோனி லிஸ்டனுக்கு எதிரான பெரிய வெற்றிக்குப் பிறகு, காசியஸ் மீண்டும் அனைவரையும் ஆச்சரியப்படுத்தினார். அவர் நேஷன் ஆஃப் இஸ்லாமில் இணைந்ததாக அறிவித்தார். அன்றிலிருந்து தனது பெயர் முகமது அலி எனப்படும் என்றார்.
முஸ்லீம்களாக மாறும் பலர் தங்கள் புதிய நம்பிக்கைகளை பிரதிபலிக்கும் வகையில் தங்கள் பெயர்களை மாற்றிக் கொள்கிறார்கள். காசியஸ் க்ளேயாகப் பிறந்த மனிதன், "புகழுக்குரியவன்" என்று பொருள்படும் பெயரைப் பெற்றான். க்ளே என்பது பல ஆண்டுகளுக்கு முன்பு ஒரு வெள்ளை மனிதனால் அவரது குடும்பத்திற்கு வழங்கப்பட்ட ஒரு "அடிமைப் பெயர்" என்று அவர் கூறினார்,.
குத்துச்சண்டை ரசிகர்கள் லிஸ்டனுக்கு எதிரான அலியின் வெற்றியால் அதிர்ச்சியடைந்தனர், ஆனால் அதிகமான மக்கள் இந்த பெரிய செய்தியால் அதிர்ச்சியடைந்தனர். பெரும்பாலான ரசிகர்கள் மிகவும் வருத்தப்பட்டனர். அவர்கள் இளம் வீரரை ஆதரித்தனர், இப்போது அலி தங்களை நிராகரிப்பதாக அவர்கள் உணர்ந்தனர்,



அமெரிக்க எதிர்ப்பு மற்றும் கிறிஸ்தவ எதிர்ப்பு என்று கருதப்பட்ட ஒரு குழுவில் அவர் சேர்ந்தது, பல வெள்ளையர் இன ரசிகர்களை கோபப்படுத்தியது. உண்மையில், அவரது அந்த அறிவிப்புக்குப் பிறகு, செய்தித்தாள்கள் மற்றும் நிருபர்கள் அலியின்


CLAY SCORES TKO IN 7th
THE LIP PULLS SURPRISE OF DECADE

புதிய பெயரைப் பயன்படுத்த மறுத்துவிட்டனர்.-அவர்கள் அவரை **காசியஸ் க்ளே** என்று தொடர்ந்து அழைத்தனர். கறுப்பின அமெரிக்கர்களுக்கு சம உரிமை வழங்குவதில் அமெரிக்கா மிகவும் பிளவுபட்டிருந்தது. கறுப்பின அமெரிக்கர்கள் மற்றும் பல வெள்ளை அமெரிக்கர்கள் அனைவருக்கும் சம உரிமைகள் வேண்டும் என்று விரும்பினர். இருப்பினும், நேஷன் ஆஃப் இஸ்லாம் சம உரிமைகளை கோரவில்லை. கறுப்பர்களையும் வெள்ளையர்களையும் முழுமையாகப் பிரிக்க வேண்டும் என்று அது அழைப்பு விடுத்தது. அலி NOIஇன் கருத்துக்களைப் பற்றி பேசத் தொடங்கினார், இது பலரை கோபப்படுத்தியது.“

"இயேசு ஒரு வெள்ளையர், சாண்டா கிளாஸ் ஒரு வெள்ளையர், காட்டின் ராஜாவான டார்சன் ஒரு வெள்ளையனாக இருந்தான், எல்லாம் வெள்ளையாகத் தெரிகிறது,”என்று அவர் கூறினார். “ஏஞ்சல் கேக் வெள்ளையாகவும், டெவில்ஸ் கேக் கருப்பாகவும் இருக்கும்.

ஆனால் இப்போது அமெரிக்காவில் [NoI தலைவர்] எலியா முஹம்மது போன்ற ஒரு மனிதர் இருப்பதால், நாங்கள் உயர்ந்தவர்கள். அலியின் சகோதரர் ரூடியும் NoI இல் சேர்ந்தார். தனது பெயரை ரஹ்மான் அலி என மாற்றிக்கொண்டார். இந்த செய்தியால் அவர்களது பெற்றோர்கள் வருத்தம் அடைந்தனர்.



காசியஸ் சீனியர் மற்றும் ஒடிசா ஆகியோர் தங்கள் மகன்களை பாப்டிஸ்ட் தேவாலயத்தில் வளர்த்தனர். அலியின் தந்தை நேஷன் ஆஃப் இஸ்லாம் உறுப்பினர்கள் அவரது மகன்களின் வாழ்க்கையைக் கட்டுப்படுத்துவதாக நினைத்தார்.

ஒடிசா க்ளே தனது மகன்கள் மதம் மாறியதை நினைத்து வருத்தப்பட்டார். அவரது குடும்பத்தினர் உட்பட மில்லியன் கணக்கான மக்கள் அவருடன் உடன்படவில்லையெனிலும், முகமது அலி தனது நம்பிக்கைகளில் உறுதியாக இருந்தார்.

## அத்தியாயம் 5
## ஒரு நிலைப்பாட்டை எடுத்தல்



மே 1964 இல், அவனுக்கு இருபத்தி இரண்டு வயதாக இருந்தபோது, அலி முதல் முறையாக ஆப்பிரிக்காவுக்குச் சென்று நைஜீரியா, கானா மற்றும் எகிப்துக்குச் சென்றான். அந்த நாட்டு தலைவர்களை அவன் சந்தித்து பேசினான். எகிப்தில், அவன் ஒட்டகத்தில் சவாரி செய்து பிரமிடுகளைப் பார்வையிட்டான்.

நைஜீரியாவில், அவனுக்கு ஏராளமான மக்கள் உற்சாக வரவேற்பு அளித்தனர். அந்த இளைஞனுக்கு இது ஒரு கண்-திறக்கும் பயணம். ஆப்பிரிக்காவில், அலி அன்புடன் ஏற்றுக்கொள்ளப்பட்டான். அவனது குத்துச்சண்டை மற்றும் அவனது நம்பிக்கைகளுக்காக அவன் ஒரு ஹீரோவாக வரவேற்கப்பட்டான்.
ஆப்பிரிக்காவிலும் பலர் முஸ்லிம்களாக இருந்தனர்.



**அலி** ஆப்பிரிக்காவிலிருந்து திரும்பியதும், அமெரிக்காவின் வாழ்க்கையை இன்னும் உன்னிப்பாகப் பார்க்கத் தொடங்கினான். அவன் அமெரிக்காவிற்கும் ஆப்பிரிக்காவிற்கும் இடையிலான வேறுபாடுகளைக் கண்டான். அவன் சென்ற ஆப்பிரிக்க நாடுகளில், கறுப்பின மக்கள் நாடுகளின் பொறுப்பாளராக இருப்பதையும், அவர்கள் இரண்டாம் தர குடிமக்களாக நடத்தப்படாமல் இருப்பதையும் கண்டான்.

"நான் ஹெவிவெயிட் சாம்பியனாக இருப்பது மிகவும் சிறுமையானதாகவும் மலினமானதாகவும் உணர்கிறேன்," என்று அவன் கூறினான், "அமெரிக்காவில் மனித உரிமைகளைப் பெறுவதற்காக எனது மில்லியன் கணக்கான ஏழை கறுப்பின சகோதர சகோதரிகள் எவ்வாறு போராடுகிறார்கள் என்பதை நான் பார்க்கிறேன்."

அவர் திரும்பி வந்த சிறிது நாட்களிலேயே, சிகாகோவைச் சேர்ந்த **சோன்ஜி ரோய்** என்ற இளம்



பெண்ணைச் சந்தித்தான். **சோன்ஜி நேஷன் ஆஃப் இஸ்லாமைச்** சேர்ந்தவராக இல்லாவிட்டாலும், ஆகஸ்ட் 1964இல் அவன் அவளை மணந்தான். ஆனால் அவர்களது திருமணம் நிலையானதாக இல்லை. **அலி** மீது செல்வாக்கு செலுத்தும் NoI நபர்களுடன் **சோன்ஜி** உடன்படவில்லை.

**அலி** குத்துச்சண்டையை தொடர்ந்தான். மீண்டும் மீண்டும் வெற்றி பெற்றான். அவன் **கனடாவிலும், இங்கிலாந்திலும், ஜெர்மனியிலும்** நடந்த பல போட்டிகளில் வெற்றி பெற்றான். ஒவ்வொரு வெற்றியிலும் அவனது புகழ் வளர்ந்தது. அவன் தொடர்ந்து கவிதைகளை உருவாக்கினான், சத்தமாகப் பேசினான், கவனத்தை ஈர்த்தான். இது அவனது மிகவும் பிரபலமான கவிதைகளில் ஒன்றாகும்:

*வண்ணத்துப்பூச்சியைப் போல மிதந்து, தேனீயைப் போல் குத்து, அவனது கண்களால் பார்க்க முடியாததை அவன் கைகளால் தாக்க முடியாது*

முஹம்மது **அலி** தனது கவித்துவமான பேச்சு முறை மற்றும் நேர்காணல்களை வழங்கும் தனது பகட்டான பாணியை கவனமாக திட்டமிட்டான்.

பத்திரிகையாளர்கள் மற்றும் நிருபர்கள் அவனைப் பற்றி எழுத விரும்பினர்.

"நான் பணம் கொடுத்திருந்தால் கூட, செய்தியாளர்கள் எனக்கு சிறப்பாக வேலை செய்திருக்க முடியாது," என்று அவன் கூறினான்.

இருப்பினும், மிக விரைவில், அவர்களின் செய்திகள் அவனுக்கு எதிராக செயல்பட்டன.
1960களில், அமெரிக்க இளைஞர்கள் இராணுவத்தில் பணியாற்றுவதற்காக தெரிந்தெடுப்பட்டனர். ஒரு நபர் தெரிந்தெடுப்பட்டிருந்தால், இராணுவத்தில் சேவை என்பது தனி நபர் விருப்பமல்ல. அது கட்டாயமானதாக இருந்தது. 1964இல், **அலி** இராணுவத்திற்கான தேர்வை எழுதினான், ஆனால் அவன் தேர்ச்சி பெறவில்லை.



1966 இல், இராணுவம் அதன் வழக்கத்தை மாற்றியது.

இம்முறை, **அலி** தேர்ச்சி பெற்றான். இராணுவம் தன்னை போருக்கு அழைக்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டான். தென்கிழக்கு ஆசியாவின் சிறிய நாடான **வியட்நாமில்** அமெரிக்கா நடத்தி வரும் போரை தான் ஆதரிக்கவில்லை என்றான்.

**அலி** தனது காரணங்களை தனது மத நம்பிக்கைகளின் மீது அடிப்படையாகக் கொண்டிருந்தான். மேலும் தனக்குத் தெரியாத மக்களுக்கு எதிராகப் போரிட வேண்டும் என்பதை அவன் நம்பவில்லை. அவனது முடிவு அமெரிக்காவில் நடந்து வரும் சிவில் உரிமைப் போராட்டத்தின் எதிர்வினையாகவும் இருந்தது.

இந்த நேரத்தில், **சோன்ஜி**யுடனான அவனது குறுகிய கால திருமணம் விவாகரத்தில் முடிந்தது. ஒரு வருடம் கழித்து, அவன் இராணுவத்தில் சேர தெரிந்தெடுப்பட்டு பணியில் சேருமாறு உத்தரவிடப்பட்டான்.

ஏப்ரல் 28, 1967இல், ஹூஸ்டனில் உள்ள அமெரிக்க ஆயுதப் படைகள் தேர்வு மற்றும் நுழைவு அலுவலகத்திற்கு சென்றான். அவனது பெயர் அழைக்கப்பட்டபோது அவனாக முன்வந்து அதை ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டான். ராணுவத்தில் சேர மறுப்பது சட்டத்துக்கு எதிரானது. முகமது அலி கைது செய்யப்பட்டான்.

# வியட்நாம் போர்

1954 இல், வியட்நாமின் பிரெஞ்சு காலனியப் பகுதியில் உள்நாட்டுப் போர் தொடங்கியது. நாட்டின் வடபகுதியைச் சேர்ந்த வியட்காங் குழு, நாடு  கம்யூனிஸ்ட் நாடக மாற வேண்டுமென்று விரும்பியது. அவர்களைத் தடுக்க அரசாங்கத்தின் இராணுவம் போராடியது. 1950களின் நடுப்பகுதி வரை பிரெஞ்சு வீரர்கள் அரசாங்கத்திற்கு உதவினார்கள், அமெரிக்க வீரர்களும் உதவிக்கு வந்தனர். வியட்நாம் வியட்காங்கின் கட்டுப்பாட்டில் உள்ள வடக்கு பகுதியாகவும், கம்யூனிசத்திற்கு எதிரான தெற்கு பகுதியாகவும் பிரிந்தது.



வியட்நாம்




போர் நடந்துகொண்டிருக்கும்போது, தெற்கு வியட்நாமுக்கு உதவ அதிகமான அமெரிக்கப் படைகள் வந்தன. இந்தப் போரில் அமெரிக்கா ஈடுவதில் பல அமெரிக்கர்கள் உடன்படவில்லை. 1960 களில் போருக்கு எதிராக அதிகமான மக்கள் எதிர்ப்பு தெரிவித்தனர். இதற்கிடையில், 58,000 அமெரிக்க வீரர்களும், மூன்று மில்லியன் வியட்நாமியர்களும் கொல்லப்பட்டனர். 1975 ஆம் ஆண்டில், தெற்கு வியட்நாமின் தலைநகரான சைகோன் வியட்காங்கின் கட்டுப்பாட்டின் கீழ் வந்தது. வடக்கு மற்றும் தெற்கு வியட்நாம் கம்யூனிச நாடான வியட்நாமில் மீண்டும் இணைக்கப்பட்டதோடு அமெரிக்க துருப்புக்கள் வெளியேறின. பல அமெரிக்கர்கள் இன்னும் போரில் ஈடுபட்டது தவறு என்று நம்புகிறார்கள்.



குத்துச்சண்டை உலகம் மிகவும் கோபமாக இருந்தது. உலக தரவரிசையை நிர்ணயித்த குழுக்கள், குத்துச்சண்டை போட்டிகளில் அலி தோல்வியடையாத போதிலும், அவரது ஹெவிவெயிட் பட்டத்தை பறித்தது. நீதிமன்றத்தில், முகமது அலி இராணுவத்தில் சேராமல் ஏமாற்றியதாக குற்றம் சாட்டப்பட்டு ஐந்து ஆண்டுகள் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டார்.
அலியின் தாயார் அலி இராணுவத்தில் சேரவேண்டுமென்று விரும்பினார்.

அவனது தாயார் அவனது முக்கியமான போட்டிகள் அனைத்திலும் கலந்து கொண்டு தன் மகனுடன் கூடவே இருந்தார். ஆனால் அவர் அவனுடைய முடிவை ஏற்கவில்லை.

சிறந்த முன்னோடியான பேஸ்பால் வீரராகிய ஜாக்கி ராபின்சன், "இந்த நாட்டில் மில்லியன் கணக்கான டாலர்களை சம்பாதிக்க விரும்பும் அவன் எப்படி நாட்டிற்காக போராடுவதை மறுக்க முடியும்?" என்றார்.

அவன் குற்றவாளி என்று தீர்ப்பானதற்குப்.பின்னர், அவனது வழக்கு மற்ற நீதிமன்றங்களில் மேல்முறையீடு செய்யப்பட்டபோது, **அலி** வேறு வேலை எதுவும் இல்லாமலிருந்த போதிலும் அவனால் குத்துச்சண்டையில் ஈடுபட முடியவில்லை. இருபத்தி ஒன்பது தொழில்முறை போட்டிகளில் தோற்கடிக்கப்பட முடியாத சாம்பியனாகவும் ஆண்டுக்கு மில்லியன் டாலர்களை சம்பாதித்தாலும், அவனால் தனது தொழிலை தொடர முடியவில்லை. இருந்தாலும், அலி மனநிறைவுடன் இருந்தான்.

"நான் செய்தவற்றில் நான் நம்பிகைக் கொண்டிருந்தேன், எனவே அரசு என்ன செய்தாலும், அதில் எனக்கு இழப்பேதுமில்லை." என்று அவர் பின்னர் எழுதினார்.

"நான் போருக்குச் செல்வதால் இருபத்தி இரண்டு மில்லியன் நீக்ரோக்களுக்கு சுதந்திரம், நீதி மற்றும் சமத்துவத்தை கிடைக்கும் என்று நான் நினைத்தால், நாளையே நான் இராணுவத்தில் சேருவேன்." என்று அவர் கூறினார். ஆச்சரியப்படதத்தக்க விதத்தில், அவரது ஆன்மீகத் தலைவர் எலியா முஹம்மது, அலியின் முடிவை ஆதரிக்கவில்லை.




அலி தன்னை பெருமைப்படுத்திக் கொள்கிறார், நேஷன் ஆஃப் இஸ்லாமை அல்ல என்று **இலியா** நம்பினார். அலியின் புகழ் ***நேஷன் ஆஃப் இஸ்லாம்*** மற்றும் **இலியா முஹம்மதுவின்** செல்வாக்கை மூடிமறைப்பதாக அவர் கவலைப்பட்டார். மேலும், NoI இல் சேர்ந்ததிலிருந்து, **அலி** வெள்ளையர்களைப் பற்றிய தனது கருத்துக்களை மென்மையாக்கிக் கொண்டார். உதாரணமாக, **டண்டீ** அவரது சிறந்த நண்பர் ஆனால் அவர் ஒரு வெள்ளையர்.

அவரது தொழில்முறை குத்துச்சண்டை வாழ்க்கையின் துவக்கத்தில் அவருக்கு நிதியுதவி செய்த **லூயிஸ்வில்லி** மக்களும் வெள்ளையர்கள். இறுதியில், **இலியா முஹம்மது**, **அலி** NoIன் உறுப்பினர் அல்ல என்று அறிவித்தார். இருப்பினும் **அலி** ஒரு முஸ்லிமாக இருப்பதை அது தடுக்கவில்லை. இராணுவத்திற்கு தெரிவுசெய்யப்பட்டதை மறுத்ததற்கு அவர் வருத்தப்படவுமில்லை. இதன் விளைவாக, அடுத்த மூன்று ஆண்டுகளுக்கு, உலகின் மிகப்பெரிய குத்துச்சண்டை வீரரான அவர் போட்டிகள் எதிலும் கலந்துகொள்ளவில்லை. அவர் கூட்டங்களில் உபேசினார். **அலி** நூற்றுக்கணக்கான உரைகளை நிகழ்த்தினார்.

அவற்றில் பெரும்பாலும் கல்லூரிகளில். தோன்றி பேசினார். ராணுவத்தில் சேர்வதில்லை என்ற தனது முடிவைப் பற்றி பேசினார். இஸ்லாம் பற்றியும், வியட்நாம் போர் பற்றியும் பேசினார். அவர் எங்கு வேண்டுமானாலும் மக்களை சந்திக்க விரும்பினார்.



**அலி** *1967*இல் மறுமணம் செய்து கொண்டார். அவரது புதிய மனைவியின் பெயர் **பெலிண்டா பாய்ட்**, திருமணத்திற்குப் பிறகு, **பெலிண்டா** தனது பெயரை **கலீலா அலி** என்று மாறறிக் கொண்டார். **அலி** முதன்முதலாக **பெலிண்டாவை** *1961*இல் அவரது இஸ்லாமியப் பள்ளிக்குச் சென்றிருந்தபோது சந்தித்தார்.



அவள் பள்ளி இதழுக்காக அவனை நேர்காணல் செய்தாள். ஐந்து வருடங்கள் கழித்து நேஷன் ஆஃப் இஸ்லாம் விசுவாசிகள் கூட்டத்தில் அவளை மீண்டும் பார்த்தான். அவர்கள் தொடர்பில் இருக்கத் தொடங்கினர், அவளுக்கு பதினேழு வயதாகும்போது, அலி மீண்டும் வாழ்க்கைத் துணையற்று தனிமையில் இருந்தார்.

'நீ என் மனைவியாகப் போகிறாய்' என்று அவன் சொன்னது நினைவுக்கு வந்தது. "நான், 'சரி.' என்று சொன்னேன் அவ்வளவுதான். . . அவர் என் முதல் காதலன்.

அடுத்த சில ஆண்டுகளில் தம்பதியருக்கு நான்கு குழந்தைகள் பிறந்தன: மரியம், இரட்டையர்கள் ஜமில்லா மற்றும் ரஷீதா, மற்றும் முஹம்மது அலி ஜூனியர்.



இந்த நேரத்தில், அவரது வழக்கு உயர் நீதிமன்றங்களில் மேல்முறையீடு செய்யப்பட்டபோது **அலி** ஓய்வாக இருந்தார். குத்துச்சண்டைகளில் போட்டியிடவில்லை என்ற போதிலும், **அலி** வெற்றி பெற்றவாறு இருந்தார். 1960 களின் பிற்பகுதியில், **வியட்நாம்** போர் தவறானது என்று பெருவாரியான மக்கள் அவருடன் உடன்பட்டனர். லட்சக்கணக்கான மக்கள் அணிவகுத்து போராட்டம் நடத்தினர். **அமெரிக்கா**விற்கு அது மிகவும் கடினமான நேரம்.

இறுதியாக 1970 இல், **ஜார்ஜியாவில்** குத்துச்சண்டையில் போட்டியிட **அலிக்கு** உரிமம் வழங்கப்பட்டது. ஒரு வருடம் கழித்து, அமெரிக்க உச்ச நீதிமன்றம் அவரது தண்டனை தவறானது என்றது. அவர் விடுவிக்கப்பட்டார். **ஹெவிவெயிட் சாம்பியன்ஷிப்பை** மீட்டெடுப்பதே **அலி**யின் அடுத்த இலக்காக இருந்தது.

## அத்தியாயம் 6
## இரண்டு பெரிய போட்டிகள்

குத்துச்சண்டையில் இருந்து அலி தடை செய்யப்பட்ட காலத்தில், ஒரு புதிய ஹெவிவெயிட் சாம்பியன் உருவானார். இதுவரை இருந்த மிக பலமாக குத்தக்கூடிய வீரர்களில் ஒருவரான **"ஸ்மோக்கின்" ஜோ ஃப்ரேசியர்** ஆவார். அவரும் அடிபடுவதைப் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை.



**முகமது அலி குத்துச்சண்டையி**லிருந்து விலகி இருந்த காலத்தில் உலகப் புகழ் பெற்றார், ஆனால் குத்துச்சண்டைக்குத் திரும்பிய பிறகும் அவர் சர்ச்சைக்குரியவராகவே இருந்தார். மற்றவர்கள் அவர் சரியானதென்று கருதியவற்றில் உறுதியாக நிற்பதற்காக அவரை இன்னும் அதிகமாக நேசித்த போதிலும், சில ரசிகர்கள் அவரது தெரிவுகளை இன்னும் வெறுத்தனர். அனைவரும் ஒரு விஷயத்தை ஒப்புக்கொண்டனர்: அவர்கள் அனைவரும் **ஜோ ஃப்ரேசியருடன்** சண்டையிடுவதைப் பார்க்க ஆர்வமாக இருந்தனர்.

ஓய்வுக்குப் பிறகு, **அலி** இன்னும் சிறந்த குத்துச்சண்டை வீரராக இருப்பாரா?




நியூயார்க் நகரத்தில் உள்ள மேடிசன் ஸ்கொயர் கார்டனில் மார்ச் 8, 1971 அன்று போட்டி திட்டமிடப்பட்டது. கார்டனில் இருந்த 20,000க்கும் மேற்பட்ட இருக்கைகள் அனைத்தும் விற்றுத் தீர்ந்தன. உலகெங்கிலும் உள்ள முந்நூறு மில்லியன் மக்கள் அந்த நூற்றாண்டின் குத்துச்சண்டைப் போட்டியையே தொலைக்காட்சியில் கண்டார்கள்.



1969இல் நிலவில் தரையிறங்குவதைப் பார்த்த பார்வையாளர்களை விட அதிகமானோர் இருந்தனர். இரண்டு குத்துச்சண்டை வீரர்களும் பதினைந்து சுற்றுகள் கடுமையாக தாக்குவதில் ஈடுபட்டனர். அலி நடனமாடினார், ஆனால் அவரால் முன்பு போல் வேகமில்லை. ஃப்ரேசியர் அலியைத் தாக்கி, அவரை வீழ்த்தினார். சண்டை முடிந்ததும், ஃப்ரேசியர் வெற்றி பெற்றதாக நீதிபதிகள் தெரிவித்தனர். முகமது அலியின் தொழில்முறை குத்துச்சண்டை வாழ்க்கையில் இது முதல் தோல்வியாகும்.

இருப்பினும், விரைவில், அலி வேறொரு போராட்டத்தில் வெற்றி பெற்றார். அமெரிக்க உச்ச நீதிமன்றம் அவரது மேல்முறையீட்டை விசாரித்து, இராணுவத்திற்கு அவர் தெரிவு செய்யப்பட்டதை அவர் மறுத்ததற்கான காரணத்தை ஏற்றுக்கொண்டது. அவர்கள் அவருடைய தண்டனையை நீக்கிவிட்டார்கள்! தான் நம்பியவற்றில் அவர் உறுதியாக நின்றார், மற்றவர்களும் அதே விடயத்தை நம்பினார்கள். ஆனால் அவர் இன்னும் உலக ஹெவிவெயிட் சாம்பியனல்ல. 1974இல், அவர் ஃப்ரேசியரைப் பழிவாங்கினார், பன்னிரண்டு சுற்றுக்குப்பின் நடுவர்களின் முடிவின் மூலம் வென்றார். இருப்பினும், ஃப்ரேசியர் அப்போது சாம்பியனல்ல; அவர் ஏற்கனவே ஜார்ஜ் ஃபோர்மேனிடம் பட்டத்தை இழந்திருந்தார். மீண்டும் சாம்பியனாவதற்கு, அலி ஃபோர்மேனிடமிருந்து சாம்பியன்ஷிப்பை வெல்ல வேண்டும்.



ஜார்ஜ் ஃபோர்மேன்

இதற்கிடையில், ஆப்பிரிக்காவில் மில்லியன் கணக்கான மக்கள் அலி ஒரு கறுப்பின முஸ்லீம் சாம்பியனாக வேண்டுமென்று விரும்பினர். So, in late 1974, எனவே, 1974 ஆம் ஆண்டின் பிற்பகுதியில், ஆபிரிக்க நாடான ஜைரின் தலைவரான மொபுடு செசே செகோ,




ஹெவிவெயிட் சாம்பியன்ஷிப் போட்டியை தனது நாட்டில் நடத்துவதற்காக **அலி** மற்றும் **ஃபோர்மேன்** ஆகியோருக்கு தலா $5 மில்லியன் வழங்கினார். இரண்டு குத்துச்சண்டை வீரர்களும் **ரம்பிள் இன் தி ஜங்கிள்** என்ற குத்துச்சண்டை போட்டிக்காக **ஜைருக்குச்** சென்றனர்.

இந்த குத்துச்சண்டை போட்டிக்காக **அலி** ஒரு புதிய கவிதையை அறிமுகப்படுத்தினார்:

***நான் ஒரு முதலையுடன் மல்யுத்தம் செய்தேன்,***
***நான் ஒரு திமிங்கலத்துடன் சண்டையிட்டேன்.***
***மின்னலுக்குக் கைவிலங்கிட்டேன்,***
***இடியையும் சிறையில் அடைத்தேன். . . .***
***போன வாரம்தான், ஒரு செங்கல்லை ஆஸ்பத்திரியில் சேர்த்தேன்.***
***நான் மிகவும் மோசமானவன். நான் மருந்துக்கே நோய் வரவைத்தேன்.***

ஜயரில், அலி எங்கு சென்றாலும் பெரும் கூட்டம் அவரைப் பின்தொடர்ந்தது. “அலி, போமாயே, அலி, போமாயே!” என்று கோஷமிடுவார்கள். அதாவது "அலி, அவனைக் கொல்லு!" என்றார்கள்.

அவர்கள் தங்கள் ஹீரோ இளம் **ஜார்ஜ் ஃபோர்மேனை** தோற்கடித்து மீண்டும் சாம்பியன் ஆக வேண்டும் என்று விரும்பினர். குத்துச்சண்டை போட்டிக்கு முன் ஒரு மாதத்திற்கும் மேலாக **அலி ஜயரில்** இருந்தார். நாடு முழுவதும் பயணம் செய்து ஆயிரக்கணக்கான மக்களிடம் பேசினார். அமெரிக்காவில் இருந்து தன்னுடன் பயணித்த செய்தியாளர்களிடம் “வெறும் கான்கிரீட் தரையில் உறங்குகின்ற என் சகோதரர்கள் மற்றும் சேவைகளின் உதவியால் வாழும் கறுப்பின மக்கள்,



சாப்பாட்டுக்கு வழியில்லாத கறுப்பின மக்கள், எதிர்காலம் இல்லாத கறுப்பின மக்கள் ஆகியோரின் வாழ்க்கையையும் நான் உயர்த்த விரும்புகிறேன்"
மேலும் எனது பட்டத்தை மீண்டும் வென்று பலருக்கு உதவ விரும்புகிறேன் என்றார்...
இந்த ஆப்ரிக்கா பயணத்தின் போது அவர் கூறிய வார்த்தைகள் ஓர் உலக பிரபலமாக அவரது பங்கை உறுதி செய்வதில் பெரும் பங்காற்றியது.
போட்டிக் களத்தில்அவரது செயல்பாடுகள் அவரை மீண்டும் குத்துச்சண்டை ***ஜாம்பவான்*** ஆக்கியது.



# ஹோவர்ட் கோசெல்

**ஜயரில்** நடந்த போட்டி மேடையருகில் -அந்த காலக்கட்டத்தில்- கிட்டத்தட்ட **அலி**யைப் போலவே அமெரிக்காவில் பிரபலமான ஒருவர் இருந்தார். அவர் **ஏபிசி** விளையாட்டு வர்ணனைளரான **ஹோவர்ட் கோசெல்.** ஒரு தனித்துவமான குரலைக் கொண்டிருந்த அவர் சத்தமாக பேசக்கூடியவர். அவர் தன்னைத் தானே புத்திசாலியாக காட்டிக்கொள்ள ஜோடனை வார்த்தைகளைப் பயன்படுத்தினார், மேலும் அவர் தன் மீது அதீத நம்பிக்கை கொண்டவராகவும் இருந்தார். கோசெல் விரும்பப்பட்ட அதேவேளையில் வெறுக்கவும்பட்டார். ஒரே ஆண்டில் அவர் நாட்டின் பிடித்தமான மற்றும் மிகவும் வெறுக்கத்தக்க தொலைக்காட்சி விளையாட்டு வர்ணனையாளராக மக்களால் வாக்களிக்கப்பட்டார்! ஒரு தொலைக்காட்சி அறிவிப்பாளராக, அடிக்கடி **அலி**யின் பல பெரிய போட்டிகள் உட்பட பல குத்துச்சண்டை போட்டிகளுக்கு **கோசெல்** வர்ணனையாளராக இருந்தார். அவரது தற்பெருமையும், மனோபாவமும் **அலி**யுடன் ஒத்துப்போனது.





அவர்களின் நேர்காணல்கள் எப்போதும் சுவாரஸ்யமாக இருந்தன. **கோசெல்** **அலி**க்கு சவால் விட முயன்றார், அதே நேரத்தில் **அலி** வர்ணனையாளரின் தலைமுடியை அல்லது அவர் பேசும் விதத்தை கேலி செய்தார்.

**கோசெல்** பல ஆண்டுகளாக குத்துச்சண்டை போட்டிகளுக்கு வர்ணனையாளராக இருந்தார், பல விளையாட்டு நேர்காணல் நிகழ்ச்சிகளை நடத்தினார், மேலும் **1970-1984** வரை **ஏபிசி**யின் திங்கட்கிழமை இரவு கால்பந்து நிகழ்ச்சியின் ஒரு அங்கமாக இருந்தார். மிகவும் பிரபலமான அவரது வாசகம் "நான் நடப்பதை அப்படியே சொல்கிறேன்.'' என்பதாகும்.

குத்துச்சண்டை வரலாற்றில், ஒரு சிலர் மட்டுமே இழந்த சாம்பியன் பட்டத்தை மீண்டும் வென்றுள்ளனர். அக்டோபர் 30, 1974இல், முகமது அலி அதைச் செய்தார். ஒரு பில்லியனுக்கும் அதிகமான மக்கள் ரம்பிள் இன் ஜங்கிள் போட்டியைப் பார்த்ததாக சில தகவல்கள் கூறுகின்றன. ஃபோர்மேன் அலியை விட இளையவர், உருவத்தில் பெரியவர், வலிமையானவர். அலி சண்டையில் தோற்றுவிடுவார் என்று பெரும்பாலான மக்கள் நினைத்தார்கள். **ஃபோர்மேனை** தோற்கடிக்க, **அலி** 'ரோப்-ஏ-டூப்' என்று ஒரு உத்தியை கையாண்டார். போட்டி தொடங்கியதும், அலி கயிற்றில் சாய்ந்தபடி ஃபோர்மேனை மீண்டும் மீண்டும் குத்த அனுமதித்தார், ஆனால் குத்துகள் பெரும்பாலும் அலியின் கைகளில் விழுந்தன. அவை **அலி**க்கு வலியை உண்டாக்கியது என்றாலும், அவை **அலி**யின் வேகத்தை குறைக்கவில்லை. இறுதியில், போட்டி நடைபெற்ற வெளிப்புற கால்பந்து மைதானத்தில் ஆப்பிரிக்க வெப்பத்தால், **ஃபோர்மேன்** சோர்வடைந்தார், **அலி** அவரை தாக்கியபடி இருந்தார். எட்டாவது சுற்றில், தனது பலமானதொரு வலது கை குத்தால் **ஃபோர்மேனை** அதிர்ச்சியடையச் செய்தார். தற்போதைய சாம்பியன் தோற்று வெளியேறினார். . . மேலும் **அலி** மீண்டும் குத்துச்சண்டை உலகின் அரசனானார்.



## அத்தியாயம் 7
## திரில்லா இன் மணிலா

1970 களின் நடுவில், **முகமது அலி** உலகின் மிகவும் பிரபலமான நபராக இருந்தார்.

எல்லாவற்றிற்கும் மேலாக, ரசிகர்கள் **அலி** மற்றும் **ஜோ ஃப்ரேசியர்** இடையே மூன்றாவது போட்டியை காண விரும்பினர்.

அக்டோபர் 1, 1975 அன்று, மூத்த வீரர்கள் இருவரும் பிலிப்பைன்ஸின் தலைநகரில் சந்தித்தனர். இந்த நிகழ்வு ***த்ரில்லா இன் மணிலா*** என்று அழைக்கப்பட்டது.

**அலியும் ஃப்ரேசியரும்** ஒருவரையொருவர் நன்கு அறிந்திருந்தனர்.

அவர்கள் ஒவ்வொரு சுற்றிலும் மிக நெருக்கமாக சண்டையிட்டனர். இருவரும் தலையிலும் உடலிலும் பயங்கரமான குத்துக்களைக் கொடுப்பதும் பெறுவதுமாக இருந்தனர். கடைசியில் **ஃப்ரேசியர்** போதுமென்ற நிலை வரும்வரை இருவரும் விட்டுக்கொடுக்கவில்லை. பதினைந்தாவது சுற்றில் போராட அவரால் வெளியே வர முடியவில்லை. **அலி** வெற்றி பெற்று சாம்பியன் ஆனார். ஆனால் அவர் ஒரு பயங்கரமான தாக்குதலுக்கு உள்ளாகியிருந்தார்.



அதன்பிறகு டிரஸ்ஸிங் ரூமில், "இது மரணத்திற்கு மிக நெருக்கமானதொன்றாக இருந்தது" என்று கூறினார். மணிலா போட்டிக்குப் பிறகு **அலி** குத்துச்சண்டையில் போட்டியிடுவதை நிறுத்திக்கொள்வார் என்று சிலர் நம்பினர். பல வருடங்களாக பல வலிகளை அனுபவித்தார். ஆனாலும் **அலி** குத்துச்சண்டையைத் தொடர்ந்தார். அவர் மேலும் ஆறு குத்துச்சண்டை போட்டிகளில் வெற்றி பெற்றார், மேலும் மேலும் அவர் தாக்கப்பட்டார். அவர் முன்பிருந்ததைப் போல் வேகமாகவும் இல்லை அவரால் அனைத்து குத்துகளையும் தவிர்க்கவும் முடியவில்லை. அவர் நிரந்தரமாக காயமடைவார் என்று மருத்துவர்களும் மற்றவர்களும் கவலைப்பட்டனர்.



பிப்ரவரி 1978 இல், **அலி** மீண்டும் தனது பட்டத்தை இழந்தார். இதுவரை இல்லாத மிகப்பெரிய குத்துச்சண்டை ஆட்டம் ஒன்றில், இருபத்தி நான்கு வயதான **லியோன் ஸ்பின்க்ஸ்**, ***லாஸ் வேகாஸில்*** **அலி**யை வீழ்த்தினார். ஆனால் பழைய சாம்பியன் மேலுமொரு மறுபிரவேசம் செய்தார். அதே ஆண்டின் பிற்பகுதியில், கிட்டத்தட்ட முப்பத்தேழு வயதான **அலி**, ஸ்பின்க்ஸிடமிருந்து பட்டத்தை வென்றார். அதன் மூலம் ஹெவிவெயிட் பட்டத்தை மூன்று முறை வென்ற முதல் நபர் என்ற பெருமையைப் பெற்றார்.



இதே நேரத்தில், அலி கலீலாவை விவாகரத்து செய்ததோடு 1975இல் அவர் சந்தித்த **வெரோனிகா போர்ஷை** மணந்தார். வெரோனிகா மூலம் மேலும் இரண்டு குழந்தைகள் பிறந்தனர்,



அவர்கள் **ஹனா** மற்றும் **லைலா** என்ற இரு மகள்கள் ஆவர் (அலிக்கு மனைவிகள் அல்லாத பெண்கள் மூலமும் மேலும் **மியா** மற்றும் **காலியா**, என்ற இரண்டு மகள்கள் உள்ளனர்.) குடும்பம் விரிவடைந்து வரும் நிலையில், குத்துச்சண்டையை நிறுத்துவதற்கான நேரம் இது என்பதை இறுதியாக உணரத் தொடங்கினார் **அலி**. அவர் 1979 இல் ஓய்வு பெற்றார்,

மீண்டும் இரண்டு போட்டிகளில் போராட வந்தார். ஆனால் அவமானகரமான தோல்விகளை சந்தித்தார் அவர். தனது திறமையின் உச்சத்தில் இருந்த காலகட்டத்தில் அவரால் தோற்கடிக்கப்படக்கூடிய போட்டியாளர்களால் அவர் எளிதில் தோற்கடிக்கப்பட்டார். இப்போது அவர் பட்டத்தை பெருவதற்காகல் அல்லாமல் பணம் சம்பாதிப்பதற்காக போட்டிகளில் பங்கேற்றார். இந்த நேரத்தில், அவர் பழைய ***நேஷன் ஆஃப் இஸ்லாமின்*** பிரிவினைவாத கருத்துக்களிலிருந்து தொடர்ந்து விலகிச் சென்றார். அவர் இஸ்லாத்தையே பின்பற்றி வந்தார். 1981இல், அவர் குத்துச்சண்டையில் இருந்து முழுமையாக ஓய்வு பெற்றார்.

அவரது மூளையால் அவரது தசைகள் சிலவற்றுடன் சரியான தொடர்புகளை இனியும் உருவாக்க முடியவில்லை, மேலும் அது சரிவர நகரக்கூடிய அவரது திறனைப் பாதித்தது. அவருக்கு நடுக்கம் உண்டானது, பேசவும் நடக்கவும் சிரமப்பட்டார். நாளடைவில், அவரது முகம் "உறைந்தது போலாகிவிட்டது" அல்லது உணர்சிகளை வெளிப்படுத்தும் திறனை இழந்துவிட்டது.

# குத்துச்சண்டை வீரர் லைலா அலி



**லைலா அலி** தனது தந்தையின் பாதையை பின்பற்றி, குத்துச்சண்டையில் இறங்கி மிகவும் வெற்றிகரமான வீராங்கனைகளில் ஒருவரானார். 1999இல், அவர் தனது முதல் சண்டையில் **நாக் அவுட்** மூலம் வென்றார். அவர் இருபத்தி நான்கு தொழில்முறை குத்துச்சண்டை போட்டிகளில் வெற்றி பெற்றார், முதலில், இருபத்தோரு போட்டிகளில் தனது எதிரியை **நாக் அவுட்** மூலம் வெற்றி பெற்றார்.
**சூப்பர் மிடில்வெயிட் உலக சாம்பியன்ஷிப்பை லைலா** கைப்பற்றினார். அவரது தந்தை அவளது குத்துச்சண்டை வாழ்க்கையை ஆதரிக்கவில்லை என்றாலும், பின்னர் அவர் அவளது சாதனைகளைப் பற்றி மிகவும் பெருமை கொண்டார்.
**லைலா** 2007 இல் குத்துச்சண்டையில் இருந்து ஓய்வு பெற்றார். அதே ஆண்டில், அவர் நட்சத்திரங்களுடன் தொலைக்காட்சியின் நடனபோட்டிகளில் தோன்றி இறுதிப் போட்டிக்கு வந்தார். அவர் உடற்தகுதி மற்றும் அழகு சாதனப் பொருட்களின் செய்தித் தொடர்பாளராகத் தோன்றினார், ஆனால் இன்னும், குத்துச்சண்டையில் அவரது வெற்றிக்காகவே அறியப்படுகிறார்.

அவரது நீண்ட குத்துச்சண்டை வாழ்க்கையில் பல முறை தலையில் அடிபட்டது தான் அவருக்கு **பார்கின்சன்ஸ்** நோயை ஏற்படுத்தியதாக பல மருத்துவர்கள் நினைத்தனர். மக்களின் பரிதாபத்தை அலி விரும்பவில்லை.



இப்போது அவர் பழைய **அலி** இல்லை என்றாலும், அவரது புகழ் இன்னும் உலகில் மாற்றத்தை ஏற்படுத்த முடியும் என்பதை அவர் அறிந்திருந்தார். அவர் மற்றவர்களுக்கு உதவ விரும்பினார் மேலும் ***அமைதி செய்தி***யைப் பரப்ப விரும்பினார்.

**முகமது அலி** உடல் நலமில்லாமல் இருந்தாரோ இல்லையோ, அவருள் அவரது போராட்ட குணம் இருந்தது.

# அத்தியாயம் 8
# குத்துச்சண்டைக்குப் பின்னர்



1986 இல், **வெரோனிகா**வுடனான அலியின் திருமணம் முடிவுக்கு வந்தது.

**லூயிஸ்வில்லில்** இருந்து **லோனி வில்லியம்ஸ்** என்ற பழைய தோழியைச் அவர் சந்தித்தார். அவர்கள் 1986 இல் திருமணம் செய்து கொண்டனர், மேலும் குத்துச்சண்டைக்குப் பிறகு அவரது வாழ்க்கையில் அவர் அவருக்கு பெரும் உதவியாக இருந்தார். 1991 இல், அவர்கள் ஆசாத் என்ற மகனைத் தத்தெடுத்தனர், அவன் கல்லூரி பேஸ்பால் நட்சத்திரமாக வளர்ந்தான்.

**அலி**க்கு மொத்தம் ஒன்பது குழந்தைகள்.

அலிக்கு குடும்பம் மிகவும் முக்கியமானதாக இருந்தது. **லோனி**யின் தாய் **ஒடெசா க்ளே**யின் சிறந்த தோழிகளில் ஒருவராவார், மேலும் 1994 இல் தனது தாயார் இறக்கும் வரை **அலி** அவருடன் மிகவும் நெருக்கமாக இருந்தார். குடும்பத்தை விட்டு வெளியேறிய நீண்ட காலத்திற்குப் பிறகு **காசியஸ் க்ளே சீனியர்** 1990இல் இறந்தார்.

அவரும் அவரது மகனும் எப்போதாவது தான் பேசிக் கொண்டனர், ஆனால் **அலி** தனது தாயார் **ஒடெசா**வுடன் இருந்ததைப்போல தந்தையுடன் நெருக்கமாக இருந்ததில்லை.



அவரது நோயின் காரணமாக, பேசுவதும் நகர்வதும் மென்மேலும் கடினமானது, ஆனால் அலியின் வசீகரம் அவரை ஒரு சிறந்த தொடர்பாளராக்கியது. அமைதியின் செய்தியைப் பகிர்ந்து கொளளவும் ஏழை மற்றும் பசித்த மக்களுக்கு உதவவும் அவர் 1990களில் உலகம் முழுவதும் பயணித்தார். பொதுவாக, அமெரிக்கர்கள் வரவேற்கப்படாத நாடுகளுக்குச் செல்லவும் அவரது புகழ் அவருக்கு உதவியது. 1990இல், அவர் ஈராக் சென்று பதினைந்து அமெரிக்க பணயக்கைதிகளை விடுவிக்க ஏற்பாடு செய்தார்.



அமெரிக்கா தங்கள் நாட்டை தாக்குவதைத் தடுக்கும் ஒரு முயற்சியில் ஈராக் தலைவர் சதாம் ஹுசைனால் அவர்கள் கைது செய்யப்பட்டிருந்தனர். கியூபாவில் நெருக்கடி ஏற்பட்டபோது அலி மருத்துவப் பொருட்களை எடுத்துச் சென்றார். 1990 இல் கறுப்பின தென்னாப்பிரிக்க தலைவர் நெல்சன் மண்டேலா சிறையில் இருந்து விடுவிக்கப்பட்டபோது, அலி உடனடியாக அவரை சந்தித்தார்.







குத்துச்சண்டைக்குப் பிறகு **அலி**யின் வாழ்க்கையின் மிகச்சிறந்த தருணங்களில் ஒன்று, 1996 ஆம் ஆண்டில், **அட்லாண்டா**வில் கோடைகால **ஒலிம்பிக்** போட்டியைத் துவங்கிவைப்பதற்காகன ஜோதியை ஏற்றுவதற்கு அவர் தேர்ந்தெடுக்கப்பட்டதாகும். **அலி**யின் தேர்வு மிகவும் ரகசியமாக வைக்கப்பட்டது. **சாம்பியன்** மீண்டும் உலகின் முன் அடி எடுத்து வைக்கும் மாய தருணத்திற்கு முன்பு ஒரு சிலருக்கு மட்டுமே இது பற்றி தெரிந்திருந்தது. அவர் வலது கையால் ஜோதியை உறுதியாகப் பிடித்திருந்ததை மில்லியன் கணக்கானவர்கள் பார்த்தனர், அதே சமயம் அவரது இடது கை நடுங்கியது மற்றும் அவரது முகம் ஒரு முகமூடி போல உணர்ச்சியற்று இருந்தது. நவீன ஒலிம்பிக் வரலாற்றில் இது ஒரு அற்புதமான தருணமாகும்.

ஐக்கிய நாடுகள் சபை 1998 இல் **அலி**யை அமைதிக்கான தூதுவராக அறிவித்தது. அதே ஆண்டில், **தி ரிங்** பத்திரிகை அவரை எக்காலத்திலும் மிகச்சிறந்த **ஹெவிவெயிட்** குத்துச்சண்டை வீரர் என்று அறிவித்தது. 1999இல், இருபதாம் நூற்றாண்டு முடிவடைந்தவுடன், பல ஊடகக் குழுக்கள் முந்தைய நூறு ஆண்டுகளைத் திரும்பிப் பார்த்தன. **ஸ்போர்ட்ஸ் இல்லஸ்ட்ரேட்டட், ஈஎஸ்பிஎன், அசோசியேட்டட் பிரஸ்** மற்றும் **பிபிசி** ஆகிய அனைத்தும் **முகமது அலி**யை இருபதாம் நூற்றாண்டின் தலைசிறந்த விளையாட்டு வீரர்களில் ஒருவராகக் குறிப்பிட்டன.

2001-ம் ஆண்டு இஸ்லாமிய தீவிரவாதிகள் பயணிகள் விமானங்களை இயக்கி அமெரிக்கா மீது தாக்குதல் நடத்தினர்

செப்டம்பர் 11, தாக்குதல்களுக்கு பலர் இஸ்லாமியர் அனைவரையும் குற்றம் சாட்டினர். **அலி** தனது மதத்திற்காகவும், பயங்கரவாதிகளுக்கு எதிராகவும் பேசினார். நியூயார்க் நகரில் தாக்குதல் நடந்த இடத்தை பார்வையிட்ட பிறகு, "இஸ்லாம் ஒரு கொலைகார மதம் அல்ல" என்று கூறினார். "இஸ்லாம் என்றால் அமைதி" அந்தக் குற்றங்களைச் செய்தவர்கள் இஸ்லாத்தைப் பின்பற்றவில்லை என்று தான் நம்புவதாகக் கூறினார்.

நவம்பர் 2005 **அலி** மற்றும் அவரது குடும்பத்தினருக்கு ஒரு சிறப்பான மாதமாகும். முதலாவதாக, அதிபர் **ஜார்ஜ் டபிள்யூ. புஷ்** சுதந்திரத்திற்கான அதிபரின் பதக்கத்தை **அலி**க்கு வழங்கினார்.



ராணுவத்தில் இல்லாத ஒருவருக்கு அமெரிக்கா கொடுக்கும் உயரிய கவுரவம் அதுதான். விஷயங்கள் எவ்வளவு மாறிவிட்டன என்பதை விருது காட்டுகிறது. ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு, அரசாங்கம் அலியை கைது செய்தது. இப்போது அது அவருக்கு மரியாதை அளித்தது.

அந்த மாதத்தின் பிற்பகுதியில், **கென்டக்கியின் லூயிஸ்வில்லில் முகமது அலி** மையம் திறக்கப்பட்டது. இந்த மையம் மக்களுக்கு பண்பு, அமைதி மற்றும் மரியாதை பற்றி கற்பிக்கிறது. தளத்தில் உள்ள ஒரு பெரிய அருங்காட்சியகம் **அலி**யின் அற்புதமான வாழ்க்கை மற்றும் வாழ்க்கைப்பணியைப் பற்றி விளக்குகிறது.



மக்கள் குத்துச்சண்டைக் களத்தில் அவரது தைரியத்தை நினைவில் வைத்திருக்கிறார்கள், அவர்கள் அவரது குணத்தை அதிகம் பாராட்டுகிறார்கள். எப்படி இருந்தாலும் அவர் தனது நம்பிக்கைகளை எவ்வாறு கடைப்பிடித்தார் என்பதை அவர்கள் போற்றுகிறார்கள். பதிலுக்கு, அவர் தனது உலகளாவிய புகழைப் பயன்படுத்தி மில்லியன் கணக்கான மக்களுக்கு உதவி செய்தார்.





அலி இன்னமும் பார்கின்சன்ஸ் நோயுடன் போராடுகிறார். அவரால் சிரிக்கவோ பேசவோ முடியாது. நிற்கவும் நடக்கவும் அவருக்கு உதவி தேவைப்படுகிறது.

இன்னமும் பில்லியன் கணக்கான மக்களுக்கு அவர் ஒரு மாமனிதராகவே விளங்குகிறார்.

1975 இல், ஒரு நிருபர் அவர் எப்படி நினைவுகூரப்பட விரும்புகிறார் என்று கேட்டார். அதற்கு பதில் அளித்த **முகமத் அலி, ஹெவிவெயிட் பட்டத்தை வென்ற ஒரு கறுப்பினத்தவர்,** எல்லோரையும் சரியாக நடத்தியவர். தன்னை நிமிர்ந்து பார்ப்பவர்களை ஒரு போதும் தாழ்வாக பார்க்காத மனிதர், தன்னால் முடிந்த அளவு மக்களுக்கு உதவி செய்பவர், இஸ்லாத்தின் மீது கொண்டிருந்த நம்பிக்கையினால் மக்களை ஒன்றிணைக்க முயற்சித்த ஒரு மனிதர்." என்றுஅவர் நினைவுகூரப்பட வேண்டும் என்றார் . . பெரும்பாலான மக்கள் அவரை ஓர் உயர்ந்த மனிதர் என்று நினைவு கூர்கிறார்கள்.

# முஹம்மது அலி வாழ்க்கை நிகழ்வுகளின் காலவரிசை

| | |
|---|---|
| 1942 | —கென்டக்கியின் லூயிஸ்வில்லில் **காசியஸ் கிளே** பிறந்தார் |
| 1954 | —ஜோ மார்ட்டினைச் சந்தித்து குத்துச்சண்டையைத் தொடங்குகிறார் |
| 1959 | —தங்கக் கையுறைகளை வென்றார், முதல் முக்கிய சாம்பியன்ஷிப் போட்டி |
| 1960 | —லைட்-ஹெவிவெயிட் பிரிவில் ஒலிம்பிக் தங்கப் பதக்கம் வென்றார் |
| 1964 | —- **சோனி லிஸ்டனை** தோற்கடித்து **உலக ஹெவிவெயிட் சாம்பியன்** ஆனார் மி**நேஷன் ஆஃப் இஸ்லாமில்** இணைந்து தனது பெயரை **முகமது அலி** என்று மாற்றிக் கொண்டார். |
| 1967 | —ராணுவத்தில் சேர மறுத்ததால் கைது செய்யப்பட்டார் |
| 1970 | —மூன்று வருட இடைவெளிக்குப் பிறகு குத்துச்சண்டைக்குத் திரும்புகிறார் |
| 1971 | —**ஃபைட் ஆஃப் தி செஞ்சுரி ஜோ ஃப்ரேசியரிடம்** முதல் சண்டையில் தோற்றார் |
| 1974 | —ஜயரில் **ஜார்ஜ் ஃபோர்மேனை** தோற்கடித்து **ஹெவிவெயிட்** பட்டத்தை மீண்டும் பெற்றார் |
| 1975 | —மணிலாவில் நடந்த திரில்லாவில் **ஜோ ஃப்ரேசியரை** தோற்கடித்தார் |
| 1978 | —**லியோன் ஸ்பின்க்ஸி**டம் தோற்று, மீண்டும் பட்டத்தை பெற **ஸ்பின்க்ஸை** தோற்கடித்தார் |
| 1981 | —குத்துச்சண்டையில் இருந்து ஓய்வு பெற்றார் |
| 1984 | —**பார்கின்சன் நோயால்** பீடிக்கப்பட்டிருப்பது கண்டறியப்பட்டது |
| 1998 | —ஐக்கிய நாடுகள் சபையால் **அமைதிக்கான தூதர்** என்று அங்கீகரிக்கப்பட்டார் |
| 1999 | —பல விளையாட்டு குழுக்களால் நூற்றாண்டின் தலைசிறந்த விளையாட்டு வீரர்களில் ஒருவராக அறியப்பட்டார் |
| | —சுதந்திரத்திற்கான ஜனாதிபதி பதக்கம் அவருக்கு வழங்கப்பட்டது, லூயிஸ்வில்லில் **முகம்மது** |

# உலக நிகழ்வுகளின் காலவரிசை

| | |
|---|---|
| **இரண்டாம் உலகப் போர் முடிவுக்கு வந்தது**— | 1945 |
| **வியட்நாம் போர் தொடங்கியது**— | 1950s |
| ஜான் **க்ளென் பூமியைச் சுற்றி வந்த முதல் அமெரிக்கர்**— | 1962 |
| **மார்ட்டின் லூதர் கிங் ஜூனியர்** வாஷிங்டனில் நடந்த பேரணியை தலைமையேற்று வழிநடத்துகிறார் – | 1963 |
| ஜனாதிபதி **ஜான் எஃப். கென்னடி** டல்லாஸில் படுகொலை செய்யப்பட்டார் | |
| ஜனாதிபதி **ஜான்சன்** முக்கியத்துவம் வாய்ந்த சிவில் உரிமைகள் சட்டத்தில் கையெழுத்திட்டார்— | 1964 |
| **மார்ட்டின் லூதர் கிங் ஜூனியர்** மெம்பிஸில் படுகொலை செய்யப்பட்டார்— | 1968 |
| வியட்நாம் போர் முடிவுக்கு வந்தது— | 1975 |
| ஜெர்மனியில் பெர்லின் சுவர் வீழ்த்தப்பட்டது— | 1989 |
| குவைத்தில் இருந்து ஈராக்கை அமெரிக்கா தலைமையிலான படை வெளியேற்றிய வளைகுடா போர் தொடங்கியது— | 1990 |
| தென்னாப்பிரிக்கா கறுப்பர்களையும் வெள்ளையர்களையும் பிரிக்கும் முறையை முடிவுக்குக் கொண்டுவந்தது— | 1991 |
| **டைகர் உட்ஸ்** மாஸ்டர்ஸ் பட்டத்தை வென்ற முதல் கறுப்பர் இன கோல்ப் வீரர் ஆவார்— | 1997 |
| செப்டம்பர் 11 அன்று பயங்கரவாதிகள் அமெரிக்காவைத் தாக்கி, உலக வர்த்தக | |

# நூற் பட்டியல்

★பக்லி, ஜேம்ஸ் ஜூனியர் முஹம்மது அலி. மில்வாக்கி: வேர்ல்ட் அல்மனாக் நூலகம், 2004.

★கோர்ன், எலியட், எட். முஹம்மது அலி: பீப்பில்ஸ் சாம்ப். சாம்பெய்ன், IL: இல்லினாய்ஸ் பல்கலைக்கழகம், 1995.

ஹவுசர், தாமஸ். முகமது அலி: <u>ஹிஸ் லைஃப் அண்ட் டைம்ஸ்.</u> நியூயார்க்: சைமன் & ஸ்கஸ்டர், 1992.

★ ஹெல்ஃபாண்ட், லூயிஸ். <u>முகமது அலி: கிங் ஆஃப் த ரிங்</u>. நியூ யார்க்: கேம்ப்ஃபயர், 2011.

★ மியர்ஸ், வால்டர் டீன். <u>த கிரேடஸ்ட்: முகமது அலி</u>. நியூயார்க்: ஸ்காலஸ்டிக், 2001.

★ டிம்ப்ளின், ஸ்டீபன். <u>முகமது அலி: கிங் ஆஃப் தி ரிங்</u>. நியூயார்க்: ஸ்டெர்லிங் பப்ளிஷிங், 2010.

மரனிஸ், டேவிட். ரோம் 1960: ஒலிம்பிக்ஸ் தட் செஞ்ட் த வேர்ல்ட். நியூயார்க்: சைமன் & ஸ்கஸ்டர், 2008.

அதிகாரப்பூர்வ தளம்

www.ali.com

முகமது அலி மற்றும் அவரது குடும்பத்தினர் அதிகாரப்பூர்வ இணையதளம் வைத்துள்ளனர். அதில் ஒரு நீண்ட சுயசரிதை, அவரது வாழ்க்கையின் புகைப்படங்கள் மற்றும் அவரது பயணங்கள் பற்றிய செய்திகள் உள்ளன.

# முகமது அலி யார்?

- காசியஸ் க்ளே என்ற சிறுவன்
- பட்டாம்பூச்சி போல மிதக்கவும் தேனீ போல குத்தவும் கற்றுக்கொண்ட ஒரு வாலிபர்
- எல்லா காலத்திற்குமான "மிகப்பெரிய" ஹெவிவெயிட் குத்துச்சண்டை சாம்பியன்
- மேலே குறிப்பிட்ட அனைத்தும்!

இந்த வேடிக்கையான மற்றும் அற்புதமான விளக்கப்பட வாழ்க்கை வரலாற்றில் உண்மையான முகமது அலியைப் பற்றி மேலும் அறியலாம்!